# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯ மார்கழி. (Jan. 78) [பரல்-௫

## ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

உ. ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை, மதுரை.

௩. திரு. கோண்டல், சு. மகாதேவன், எம். ஏ., பி. எஸ்ஸி.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை, சென்னை

௪. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிங். மாயூரம்.

௫. டாக்டர் எஸ். வி. சுப்பிரமணியம்,
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

௬. புலவர் இரா. இளங்குமரன்,
மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6.

௭. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை

## கழகப் புதிய வெளியீடுகள்

**சோழர் ஆட்சி—என். கே. வேலன், பி.ஏ.**

தமிழக மூவேந்தருள் சோழ மன்னர்கள் ஆட்சித்திறம் படைத்தவர்களாய் விளங்கினர் என்பது அவர்தம் வரலாற்று ஆராய்ச்சிகளால் அறியலாம். எனவே சோழர் வரலாற்றினைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் மாணவருலகம் படித்தறியவும், சிறப்பாக சோழரின் ஆட்சி முறையினைத் தெரிந்து கொள்ளவும் இந்நூல் பெரிதும் பயன்படும் வகையில் எழுதப்பட்டுள்ளது. பள்ளி, கல்லூரி நூலகங்களில் இடம்பெறவேண்டிய சிறந்த வரலாற்று நூல்.

ரூ. 5 00

**சிவப்பதிகள் வரலாறு—(வழி விளக்கங்களுடன்)**

தேவாரப் பாடல்பெற்ற சிவப்பதிகளுக்குச் சென்று இறைவனை வழிபடவும், சுற்றுலாவாகச் சென்று சிவப்பதிகளின் மாண்புகளை அறியவும், சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது இந்நூல். சிவப்பதிகளுக்கு அண்மையில் உள்ள புகைவண்டி நிலையங்கள். இருப்புப் பாதை எண் முதலியன பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. முக்கியமான திருக்கோயில்களின் படங்களும், இருப்புப்பாதை விளக்கப்படமும் இணைக்கப்பட்டுள்ளன. சுற்றுலாச் செல்வோர் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல். அழகியபதிப்பு

ரூ. 6 75

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| | | |
|---|---|---|
| சிலம்பு ௫௨ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, மார்கழி<br>சனவரி 1978 | பரல் ௫ |


## தொழில் நுட்பப் பல்கலைக்கழகம்

மக்கள் பல்லாற்றானும் மேம்பட்டுச் சிறந்து வாழ்தற்குக் கல்வி கலைகளின் பயிற்சியும் அவற்றின் வழிப்பட்ட முயற்சியும் வளர்ச்சியுமே அடைப்படையானவும் இன்றியமையாதனவுமாம். இயற்கையின் அரிய பேராற்றல்களை மக்கள் தக்கவாறு பயன் படுத்திக் கொள்ளுதற்குக் கல்வி கலைகளான் விளக்கம் பெற்றுள்ள நல்லறிவே ஏற்புறு கருவியாகும். கல்வி கலைகளின் வளர்ச்சியோ பெரும்பாலும் அவற்றைப் பயிற்றுவிக்கும் கலைக் கழகங்களின் நிலைகளைப் பொறுத்தே அமைவதாகும். ஆகவே நம் தமிழ்நாட்டில் பல்கலைக் கழகங்களின் நிலையை அத் துறையில் ஆராய்ந்துள்ள அறிஞர், தம் அறிக்கையின் அடிப் படையில் எண்ணிப் பார்ப்போம்.

பல்கலைக் கழகங்களைப் பொதுப் பல்கலைக் கழகங்கள், பல்கலைக்கழகத் தகுதி பெற்ற கல்வி நிறுவனங்கள், துறை வழிப் பல்கலைக் கழகங்கள் என மூவகையாகப் பிரிக்கலாம். 1946 ஆம் ஆண்டு இந்தியத் துணைக் கண்டத்தில் மொத்தம் 18 பல்கலைக் கழகங்கள் இருந்தன. அவை யாவும் பொதுப் பல்கலைக் கழகங்களே. அவற்றுள் 2 தமிழ்நாட்டில் இருந்தன.

1949 ஆம் ஆண்டில் தமிழகத்திற்கு இரு பல்கலைக் கழகங்கள் போதாவென்றும், திருச்சிப் பகுதியில் இன்னொரு பல்கலைக்கழகம் நிறுவுதல் வேண்டும் என்றும் டாக்டர். இராதா கிருட்டிணனர் தலைமையில் அமைந்த பல்கலைக்கழகக் கல்விக்

குழு பரிந்துரை செய்துள்ளது. ஆயினும் அது முற்றும் புறக் கணிக்கப்பட்டது. 1965 ஆம் ஆண்டில் இந்தியாவில் பல்கலைக் கழகங்களின் எண்ணிக்கை 78 ஆக உயர்ந்தது. அப்பொழுதும் தமிழ் நாட்டில் பழைய 2 பல்கலைக் கழகங்கள் மட்டுமே இருந்தன. 1966 ஆம் ஆண்டில் தமிழ்நாட்டில் மூன்றாவது பல்கலைக்கழகமாக மதுரைப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. ஆனால், 1945 இல் 35,000 ஆக இருந்த மாணவர்களின் எண்ணிக்கை 1965 இல் 1,00,000 ஆக உயர்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது, மாணவர் தொகை வளர்ச்சி கல்லூரி வளர்ச்சிக்கேற்ப இந்தியாவின் ஏனை மாநிலங்களில் பல்கலைக் கழகங்கள் வளர்ந்து வந்திருப்பவும் தமிழ்நாடு மட்டும் அவ்வகையில் வளராதது வருந்தத் தக்கதாகும்.

வேளாண்மை வளர்ச்சியைக் கருதி 1961 ஆம் ஆண்டில் நடுவணரசு ஒவ்வொரு மாநிலத்திலும் வேளாண்மைப் பல்கலைக் கழகம் நிறுவ உதவுவது என்று முடிவெடுத்தது. இம் முடிவைப் பயன்படுத்திக்கொண்டு இந்தியாவின் பழைமையும் சிறப்பும் வாய்ந்த வேளாண்மைக் கல்லூரியையுடைய கோவையில் இந்தியாவின் முதல் வேளாண்மைப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால், தமிழ்நாடு முனைந்து கவனஞ் செலுத்தாமையால் ஷை திட்டம் வகுக்கப்பட்ட 10 ஆண்டுக்காலம் கழித்து இந்தியாவின் 12 ஆம் வேளாண்மைப் பல்கலைக் கழகமாக 1971 ஆம் ஆண்டில் கோவை வேளாண்மைப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. இன்று மகாராட்டிர மாநிலத்தில் மட்டும் 4 வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன. 1974 ஆம் ஆண்டுவரை இந்தியாவில் மொத்தம் 115 பல்கலைக்கழகங்கள் அமைந்துள்ளன. அவற்றில் தமிழ்நாட்டிற்கு உரியவை 4 பல்கலைக் கழகங்களே. பல்கலைக் கழகத் தகுதி பெற்ற கல்வி நிறுவனமாக அறிவிக்கப்பட்டுள்ள காந்தி கிராமக் கல்வி நிலையத்தையும் சேர்ப்பினும் 5 ஆகும். இவ் வெண்ணிக்கையும் இந்தியாவில் 1/23 பங்கு அளவினதே யாகும்.

இனி மக்கள் தொகையின் அடிப்படையில் பார்ப்போம். 267 நூறாயிரம் மக்களைக் கொண்ட குசராத்து மாநிலத்தில் 8 பல்கலைக் கழகங்களும், 135 நூறாயிரம் மக்களைக் கொண்ட

பஞ்சாபு மாநிலத்தில் 5 பல்கலைக் கழகங்களும் 415 நூறுயிரம் மக்களைக் கொண்ட மத்தியப் பிரதேசத்தில் 10 பல்கலைக் கழகங்களும், 444 நூறுயிரம் மக்களைக் கொண்ட மேற்கு வங்காளத்தில் 10 பல்கலைக் கழகங்களும் உள்ளன. 411 நூறுயிரம் மக்களைக் கொண்டதான தமிழ்நாட்டிலோ 5 பல்கலைக் கழகங்களே உள்ளன. அனைத்திந்திய மட்டத்தில் 1971 இல் 74 நூறுயிரம் மக்கட்கு ஒரு பொதுப் பல்கலைக்கழகம் என்றிருக்கத் தமிழ்நாட்டிலோ 137 நூறுயிரம் மக்கட்கு ஒரு பல்கலைக்கழகம் மேனியே அமைந்துள்ளது.

டாக்டர் கயேந்திரகட்கர் தலைமையில் அமைக்கப் பெற்ற கல்வியறிஞர் குழு 1971 ஆம் ஆண்டு வெளியிட்ட அறிக்கையின்படி ஒரு பல்கலைக் கழகத்தின் ஆட்சிமுறை சிறப்புற அமைய வேண்டுமாயின் ஒரு பல்கலைக் கழகத்தின்கீழ் 30 அல்லது 40 கல்லூரிகளே இருத்தல் வேண்டும் என்று பரிந்துரைத்துள்ளது. 1972 இல் கிடைத்த விளக்கப்படி இந்தியா முழுமைக்கும் 37 கல்லூரிகளுக்கு ஒரு பல்கலைக்கழகம் இருந்தது. மாணுக்கர்கள் எண்ணிக்கையின்படி பார்த்தால் 32,000 மாணுக்கர்கட்கு ஒரு பல்கலைக்கழகம் இருந்தது. 1974 கணக்கின்படி தமிழ்நாட்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தின்கீழ் 160க்கு மேற்பட்ட கல்லூரிகளும், மதுரைப் பல்கலைக் கழகத்தின்கீழ் 100க்கு மேற்பட்ட கல்லூரிகளும் உள்ளன. சென்னைப் பல்கலைக்கழக மாணுக்கர் எண்ணிக்கை 1,44,200. மதுரைப் பல்கலைக்கழக மாணவர் எண்ணிக்கை 86,790 ஆகும்.

1970 இல் இந்தியா முழுவதினும் 4,153 கல்லூரிகள் இருந்தன. இவை 1·3 நூறுயிரம் மக்கட்கு ஒரு கல்லூரி என அமைந்தனவாகும். அவற்றுள் 236 கல்லூரிகள் தமிழ்நாட்டில் இருந்தன. இவை 1·7 நூறுயிரம் மக்கட்கு ஒரு கல்லூரியாக அமைந்துள்ளன. இந்தியாவின் கல்வி நிலை 29·55 விழுக்காட்டினர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்பதும் தமிழ்நாட்டின் கல்வி நிலை 393·9 விழுக்காட்டினர் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் என்பதும் கருதுதற்குரியனவாகும். இங்ஙனம் எந்த முறையில் கணக்கிட்டுப் பார்ப்பினும் இந்தியத் துணைக்கண்ட நிலையிலேயும் தமிழ்நாட்டின் கல்விக் கூடங்களின் வளர்ச்சி வருந்தத் தக்கதாகவே உள்ளது.

இந்தியத் தொழில்நுட்பக் கல்விக் கழகங்கட்கு நடக்கும் நுழைவுத் தேர்வுகளில் தமிழ்நாட்டுக் கல்வி வளர்ச்சிக் கேற்ப வெற்றி பெறுவதில்லை. இந்தியாவின் மேற்குப் பகுதி வடபகுதி மாணவர்களே கணிசமான அளவில் வெற்றி பெறுகின்றனர். வெற்றிப்பட்டியலில் இடம்பெறும் தமிழ் மாணவர்களோ பெரும் பாலும் தில்லி, பம்பாய் போலும் வடமாநிலங்களில் பயின்றவ ராவர். கணக்கு முதலிய துறைகளில் இளம் அறிவியல் (B.Sc.) பட்டம் பெறும் தமிழ்நாட்டு மாணவர்களின் தரம் வடமாநிலங் களினின்றும் வரும் மாணவர்களின் தரத்துடன் ஒப்பிடத் தக்கதாய் இல்லை என்பது பெங்களூரிலுள்ள இந்தியன் அறி வியல் பயிற்சிக் கழகத்திற் பயிலும் மாணவர்களின் கூற்றால் அறியக் கிடக்கின்றது. கடந்த பத்தாண்டுகட்கு மேலாக இந்திய ஆளுமைத் துறைப் பணித் (I. A. S.) தேர்வு, இந்திய காவல்துறைப் பணித் (I. P. S.) தேர்வு ஆகியவற்றில் தமிழ்நாடு பெறும் இடங்கள் குறைந்து விட்டன; குறைந்து வருகின்றன.

1974 இல் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவினர் தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களை ஆராய்ந்தனர். அக் குழுவின் உறுப்பினர் ஒருவர் தமிழகம் கல்வியில் முன்னேறியுள்ள மாநிலமே யாயினும், ஆராய்ச்சி, ஆராய்ச்சித் துறைகள், ஆராய்ச்சி ஏந்தகள் என்ற உயர்நிலை வாய்ப்புக்களில், கல்வி யில் பின்தங்கியுள்ள பீகார், மத்தியப் பிரதேசம் போன்ற மாநிலங்களைவிடப் பின்தங்கியுள்ளது என்று குறிப்பிட் டுள்ளார்.

எனவே தமிழ்நாடு புதிய பல்கலைக் கழகங்கள் நிறுவுவதில் முனைந்து ஈடுபடுதல் வேண்டும். திருச்சிப் பல்கலைக் கழகம், கோவைப் பல்கலைக்கழகம், நெல்லைப் பல்கலைக்கழகம் ஆகிய பொதுப்பல்கலைக் கழகங்களும், துறைதோறும் தனித்தனிப் பல்கலைக் கழகங்களும் நிறுவப்படல் வேண்டும். அவ்வாறு செய்தால்தான் தமிழ்நாடு இந்தியாவின் ஏனைய மாநிலங்களின் அளவேனும் வளர்ச்சிபெற முடியும். தமிழ்நாட்டினும் சற்று மிகுதியான மக்கள் தொகையைக் கொண்ட பிரிட்டனில் 52 பல் கலைக் கழகங்கள் உள்ளன. அமெரிக்காவிலோ 300 க்கு மேற் பட்ட பல்கலைக் கழகங்களும் 1800 க்கு மேற்பட்ட தாமே பட்ட

மளிக்கும் தகுதிபெற்ற கல்வி நிறுவனங்களும் உள்ளன. 6 கோடி மக்கள் தொகையினையுடைய மேற்கு செருமனியில் தொழில் நுட்பப் பல்கலைக் கழகங்கள் உள்ளன. இந் நிலைகளைப் பார்க்கும்போது மேலே குறிப்பிட்டுள்ளது தவறாகாது என்பது புலப்படும்.

சென்னையில் தொழில் நுட்பப் பல்கலைக் கழகம் தொடங்கு முன்னரே முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதற்கான வரைவு சமைவாக இருக்கின்றது. தேவையான இசைவுகள் பெறப்பட்டுள்ளன. திட்டம் செயற்பட ஆவன செய்வது அரசின் கடமையாகும். அண்மையில் கிண்டி பொறியியற் கல்லூரியில் உரையாற்றிய மாண்புமிகு அமைச்சர் மனோகரன் அவர்கள் தமிழ்நாடு தொழில்நுட்பப் பல்கலைக் கழகம் விரைவில் தொடங்கப்படும் என்று குறிப்பிட்டுள்ளார். அது விரைவில் நிறைவேறும் என்று நம்புகின்றோம்.

கடந்த தேர்தலுக்கு முன் இந்திய நடுவணரசு புதிய பல்கலைக் கழகங்கள் தொடங்க இசைவளிக்கப்படாது என்று கண்டிப்பாகக் கூறியிருப்பினும் புதுப் பல்கலைக்கழகங்கள் தோன்றிக் கொண்டுதான் இருந்தன. ஆந்திர மாநிலத்தில் மட்டும் 4 பல்கலைக் கழகங்கள் தோன்றின. ஆனால், இப்பொழுது நடுவணரசு புதுப்பல்கலைக் கழகங்கள் தொடங்கத் தடையில்லை என்று அறிவித்துள்ளது. இச் சார்பான நிலையைப் பயன்படுத்திக்கொண்டு தமிழ்நாட்டரசு பல்கலைக் கழகங்களை இரட்டிப்பாக வளர்ச்சியுறச் செய்தல் இன்றியமையாததாகும்.

பல்கலைக் கழகங்கள் நிலையானவை. இனமும், மொழியும் தொடரும்வரை அவற்றின் வாழ்வோடும் வளத்தோடும் இணைந்து வளர்பவை; வாழ்வை அத்தகைய நிலைபேறும் தனிச் சிறப்பும் கொண்ட பெரு நிறுவனங்களைப் படைக்கும் வாய்ப்பும் பொறுப்பும் இற்றைத் தமிழ்நாட்டு அரசை எதிர்நோக்கியுள்ளன.

---

*இக் கட்டுரை தொழில்நுட்பக் கல்வித்துறை இயக்குநர், டாக்டர் வா. செ. குழந்தைசாமி அவர்கள் அறிக்கையின் அடிப்படையில் எழுதப்பட்டது.*

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௨, பரல் ௪, பக்கம் ௧௬அ-இன் தொடர்ச்சி)

தமியினது அருள் 'தமி அருள்' எனப்பட்டது. இது ஆறன் தொகை. பொறிகள் காட்டும் பண்டங்களை உயிர் அறிவதாய் இருப்பதனால் அவ்வுலகப் பண்டங்களில் மறைந்து கொண்டு தன் எழிலையும் ஆற்றலையும் காட்டிவரும் மறைப் பம்மையை (திரோதான சத்தியை) இங்கே 'அருள்' என்றார் ஆசிரியர்.

இவ்வாறு இந் நூற்பா, பொறிகள் முதலிய மாயைக் கருவிகளையும், அவற்றால் உயிர்கள் உரசி எதையும் அறிய வேண்டியிருப்பதனால் வினைகளையும், தொன்மையான அறியாமையிருள் காரணமாக இவ்வாறு மாயையும் கன்மமும் இடையிற் சேர்ந்து அறிய வேண்டியிருத்தலின் ஆணவ வல்லிருளையும், அவாவி நிற்கிறது. விளக்கி, அவற்றின் இயல்புகளைத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. அதனால், 'மலங்களின் இலக் கணம்' உரைப்பதாய் இந் நூற்பா அமைந்தது.

முதலில், மலப் பொருள்களில் மறைந்துகொண்டு மறைப் பம்மை தன் ஆற்றலைக் காட்டவேண்டி யிருக்கிறது. அதனால், 'திரோதான சத்தி' என்னும் 'மறைப்பு அம்மை'யையும் 'மலம்' என்றே எண்ணவேண்டி யிருக்கிறது. மறைப்பம்மையின் இவ் வுதவி மறத்தற் கியலாதது. இது, அம்மையின் முதல் உதவி! அதனால் இந் நூற்பாவின் கருத்தாக ஆசிரியர், 'ஆன்மாக் களிடத்துத் தமது முதலுபகாரம் உணர்த்துதல் நுதலிற்று' என்றார்.

மலங்களின் இலக்கணத்தை வெளிப்படையாக அன்றி இங்ஙனமெல்லாம் உருவி அறியவேண்டி யிருப்பதனால், இந் நிலை 'அவாய் நிலை பற்றிய இயைபு' என்று கொள்ளப்படும்.

இங்கே உணர்த்தப்பட்ட மலங்களின் இலக்கணங்க ளாவன: எல்லாத் துன்பங்களுக்கும், ஏனை மாயை கன்ம மலங் களுக்கும் காரணமா யுள்ள ஆணவ மலத்தின் அறியாமை அறியப்படுகிறது. அறியாமை விளைத்தலால், அது, அறியாப் பொருள் (சடம்) என்று தெரிவது ஒன்று; பொறிகள் முதலிய மாயைக் கருவிகளும் கன்மமும், தம்மையும் அறியாமல் தமக்கு உதவும் உயிரையும் அறியாமல் இருப்பதனால் அவையும்

அறியாப் பொருள்களாகவே உள்ளன என்பது மற்ருென்று; இந்த அறியாமைப் பொருள்களிலெல்லாம் மறைந்து இயங்கும் மறைப்பம்மையும் அதனுல் அறியாப் பொருளாகவே (மல மென்றே) எண்ணப்படுகின்றது என்பது இன்னுென்று; மாயை கன்மங்களாகிய மலங்களும் இம் மறைப்பம்மையில் அடங்குதலால் 'அருள்' எனப்படும் மறைப்பம்மையைக் கூறுவதிலிருந்து மற்ற மலங்களின் இயல்பும் விளங்குகின்றன என்பது வேருென்று.

> ''மாயை கர்மங்கள் 'திரோதான சத்திக்'குக் கருவியாய் அதனுள் அடங்குதலின், தமது முதலுபகாரம் எனப்படும் 'திரோதான சத்தி'யது இலக்கணம் கூறவே, அவற்றது இலக்கணமும் கூறியவாருதல் அறிக''

என்பது சிவஞான முனிவர் உரை.

இந் நூற்பாவின் பிரிவுகள் இரண்டு. 'விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்தறிந்து அறியா' என்பது முதற் பிரிவு. 'தாம் தம் உணர்வின் தமி அருள்' என்பது இரண்டாம் பிரிவு.

முதல் பிரிவு:

நூற்பாவின் கருத்துப்படி இங்கு 'மேற்கோள்' எடுத்துக் கொள்ளப்பட்டது; நூற்பாவின் கருத்து, ஆன்மாக்களிடத்தில் சிவசத்தியிலிருந்து வெளிப்பட்ட மறைப்பம்மை (திரோதான சத்தி) செய்யும் தொடக்க உதவி கூறப்பட்டது. அதற்காக இம் முதல் பிரிவில் 'ஐம்பொறிகளும் ஆன்மாவால் உணரும்' எனவும் இரண்டாம் பிரிவில், 'ஆன்மாவும் தமக்கு முதலாகிய ஆண்டவன் சத்தியால் (மறைப்பம்மையால்) உணரும்' எனவும், 'மேற்கோள்கள்' எடுத்துக்கொள்ளப்பட்டன.

முதல் பிரிவின் மேற்கோள், 'சாங்கியர்' கொள்கையை மறுப்பதாயிற்று. அவர்களுக்கு, 'ஐம்பொறிகளின் வாயிலாக, ஆன்மாவின் முன்னிலையில், புத்தி தத்துவமே அறியும்' என்பது எண்ணம். ஆதலால், 'கருவிகளோடு கூடி ஆன்மாவே அறியும்' என்று ஆசிரியர் இம் முதல் பிரிவால் புலப்படுத்துகிருர்.

'ஆன்மா அக் கருவிகளோடு ஒன்றி அறிவதாகும்; கருவிகளோடு அப்படி ஆன்மா ஒன்றிக் கண்டால் அல்லாமல் அக் கருவிகள் தாமே அறியமாட்டா' என்று ஆசிரியர் அதற்கு ஏதுக் காட்டினுர். 'கண்டாலல்லாமல்' என்று, இவ்வாறு எதிர்மறை

யாகவும் புலப்படுத்தாவிட்டால், ஆன்மாவின் அறிவுத் தொடர்பு கருவிகளின் காட்சிக்கு இன்றியமையாதது என்பது தெரியாது.

அதை ஒரு செய்யுளால் நன்கு விளக்குகிறார் :

"ஐம்பொறியை ஆண்டங் கரசா யுளநிற்ப,
ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்;—ஐம்பொறியின்
காணுதேல் காணுது, காணுமுளங் காணுதேல்
காணுகண் கேளா செவி."

'ஆன்மா ஐம்பொறிகளை ஆண்டு அரசனைப்போல் நிற்கிறது; அவ்வாறு தமக்கு அரசாக உயிர் உள்ளதை ஐம்பொறிகள் அறிவதில்லை. ஆனால், ஐம்பொறிகளும் உயிர்க்குத் தேவையே; ஏனென்றால், பொறியினால் அறியாவிட்டால் உலகத்தை அறிய வழியில்லை. உயிர் தங்களைப் பயன் படுத்தாவிட்டால் கண் செவி முதலானவை ஒன்றையும் அறிய வாய்ப்பில்லை' என்று இச் செய்யுளால் தெரிந்துகொள்ளலாம்.

**செய்யுவின் பொருள் :**

ஐம்பொறியை ஆண்டு அங்கு அரசாய் உளம் நிற்ப— ஐம்பொறிகளையும் ஆண்டுகொண்டு நெற்றியிடத்தில் அரசாக உயிர் நிற்பதனால் (அப்படி அறிவதாயிருந்தும்) ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்—அந்த ஐம்பொறிகளும் உயிரை அறிய மாட்டாவாகின்றன. (அப்படியானால் உயிர் ஐம்பொறி வாயிலாக அல்லாமலும் அறியுமோ என்றால்), ஐம்பொறியின் காணுதேல் காணுது—ஐம்பொறி வாயிலாக அறியாவிட்டால் உயிர் ஒன்றையும் அறியாது; காணும் உளம் காணுதேல்—அறியும் உயிர் அப்படி அறியாவிட்டால்; காணு கண் கேளா செவி— கண்களும் காணமாட்டா, செவிகளும் கேட்கமாட்டா (மற்றப் பொறிகளும் அவ்வாறே தத்தம் செய்கைகளைச் செய்ய மாட்டா).

'அங்கு அரசாய்' என்பது நெற்றியிடத்தில் அரசனைப்போல என்னும் பொருட்டு; 'உளம் நிற்ப' என்பதற்கு உயிர் நிற்பதனால் என்று பொருள் கொள்க. நிற்ப என்னும் வினையெச்சம் காரண காரியப் பொருள் கொள்ளுதலால் அதற்கேற்ப உரைத்துக் கொள்ளப்பட்டது. உளம் என்பதும் உள்ளம் என்பதும் உயிரை உணர்த்தும். கண்களையும் செவிகளையும் கூறினமை யால் மற்றப் பொறிகளும் இங்கே பெறப்பட்டன. இதனைத் துணை இலக்கணம் (உப இலக்கணம்) என்று ஆசிரியன்மார் கூறுவர். காணு கேளா என்று பன்மையாய் உரைக்கப்பட்டமை, ஓர் உயிர்க்கே இரண்டிரண்டு இருத்தலால் என்க.

இச் செய்யுள், 'ஆன்மா, பொறிகளோடு ஒற்றுமைப் பட்டால் அல்லாமல் பொறிகள் எவற்றையும் அறியா வாதலால், ஆன்மாவே பொறிகள் வாயிலாக எவற்றையும் அறியும்' என்பதை விளக்கமாகப் புலப்படுத்தியது. ஐம்பொறிகளுக்கும் அரசுபோல் ஆன்மா நிற்கின்றது என்று ஓர் எடுத்துக் காட்டு இச் செய்யுளில் வந்தது. அரசனைக் காணுமலே பணியாளர் அவன் ஆணையை மட்டும் நிறைவேற்றுவர். அப்படி உயிர்தான் அறிகிறது என்பது தெரியாமலே பொறிகள் பணிசெய்கின்றன. ஆதலால் அரசு இங்கே உவமையாயிற்று.

இரண்டாம் பிரிவு :

உயிர்கள் தமக்கு முதலாகிய ஒரு பொருளை நாடுகின்றது தென்ருல், அம் முதலும் வேருெரு பொருளை நாடுதலும், அதுவும் தனக்கு முதலாக வேருெரு பொருளை அவாவுதலுமாக இங்ஙனம் முடிவில்லாமலே வரம்பின்றிப் போகுமே என்று 'ஈசுவர விகாரவாதி' முதலியோர் எண்ணுவர்.

இறைவன் தனக்கொரு முதல் உடையவன் அல்லன்; தானே முதல்வன்; இதற்காகவே நூற்பாவில் 'தமி' என்று அவன் குறிக்கப்பட்டான். 'தனியன்' என்பது அதன் பொருள். 'தனக்கொரு முதலில்லாதவன்' என்பது கருத்து. இரண்டாம் பிரிவின் மேற்கோளும் இதனுல், 'ஆன்மாவும் தமது முதலாலே உணரும்' என்று 'முதல்' என்னும் சொல்லைக் குறித்துக் கொண்டது. இறைவனே முதலானபின், அவனுக்கொரு முதல் கூடாதாதலால், இவ்வாறு வந்தது. இதனுல் மேலும் வரம்பின்றி ஓடுமோ என்று எண்ணுவதற்கு இடமில்லை.

இதனை விளக்குவதற்காகவே நூற்பாவின், 'இரண்டாம் பிரிவு' எழுந்தது. ஆசிரியர் இதன் மேற்கோளாக இதுவும் தமது முதலாலே உணரும் என்று அருளிச் செய்தார். 'இதுவும்' என்றது ஆன்மாவும் என்னும் பொருட்டு.

இது என்று ஒருமையாகக் கூறித் தமது என்னுமிடத்தில் தம் என்று பன்மையாகக் கூறுவது ஒரு வழுவாயினும், 'யான் எம் ஊர் புகுவன்' என்பதைப் போல ஒருமை பன்மை வழு அன்மையாய் இங்கே முடிந்தது. நூற்பாவிலும் 'தாம் தம்' என்று பன்மையாகவே உரைக்கப்பட்டது. கருவிகளும் உயிர்களும் தமக்கு முதல் உடையன; முதல்வனுக்கு அஃதில்லை என்று கொள்ளப்படும்.

பொறிகள் உலகப் பொருள்களை அறிவதானுலும் தாம் அங்ஙனம் அறிவதற்குக் காரணம் உயிர் என்று அறியாதது

போல, உயிரும் தன்னறிவுப் பெருக்கத்துக்குக் காரணம் தன் முதல்வனே என்று உணராமல் இருக்கிறது என்று பொருள்படும் படி, 'இவ் வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப் போலத் தானுந் தன்னை உணராது நிற்றலான்' என ஆசிரியர் தமது மேற்கோளுக்கு ஓர் ஏதுவும் கூறிக்கொண்டார். அந்த ஏது வில் இந்திரியங்களைப் போலத் தன்னை உணராது நிற்றலான் என்று கூறிய இடத்தில் தன்னை என்னும் சொல்லைப் பெய்து, 'தன்னையும் உணராது' 'தன் ஐயையும் உணராது' என்று இரண்டு பொருள்படும்படி கூறினார்.

இனி, 'கருவிகள் அறியாமைப் பொருள்கள், உயிர் அறிவுடையது; அப்படி யிருக்கும்போது உயிரே எதனையும் அறியுமே, முதல்வன் உதவி எதற்கு?' என்று ஒரு நினைவு தோன்றும். உயிரின் அறிவு தானே அறிவதன்று. வேறொன்று அறிவிக்கத் தான் எதனையும் அறியும். ஆதலால் முற்றறிவு உடைய முதல்வனது உதவி சிற்றறிவுடைய உயிர்க்குத் தேவை யாயிற்று. கருவிகள் அறியாப் பொருளாதலின் உயிர்க்கு அறிவிக்குந் திறன் அவற்றிற்கு இல்லை.

இன்னொரு நினைவும் இங்கே தோன்றக் கூடும். பொறி களுக்கு அடியோடு அறிவில்லை என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால், முதல்வன் அறிவிக்க உயிர் அறிவு பெருகிப் பொறி களின் வாயிலாக உலகை அறிவதாயினும், அதனால் உண்டாகும் இன்ப துன்பப் பயனை அடைவது உயிரே; அதுபோல முதல்வன் உயிர்க்கு அறிவிப்பதனால் அம் முதல்வனுக்கும், இன்ப துன்பப் பயன் உண்டோ என்று ஒரு கேள்வி எழும்.

இஃதொரு பொருத்தமற்ற கேள்வி. இன்பமும் துன்பமும் இருவினைகளால் உண்டாவன. முதல்வனுக்கு வினையில்லை, உயிர்தான் வினையோடு உழல்வது; ஆதலால், இன்ப துன்பப் பயன் உயிர்க்கு மட்டுந்தான் உண்டு. இவ் வுண்மையைத் தெளிவிப்பதற்காகத்தான் மறைநூல்கள், ஆண்டவன் திரு முன்னிலையில் உயிரும் உலகமும் இயங்குகின்றன என்று கூறின. ஆண்டவன் வினை இல்லாதவன்; உலகமும் உயிரும் இயங்குவதற்கு இறைவன் திருமுன்னிலையே உதவுகிறது என்பது இதன் கருத்து.

திருமுன்னிலை என்பது இங்கே வெறும் முன்னிலையன்று; 'சிவ சத்தி' இறைவனுள் இருந்துகொண்டு தன் எண்ணத்தால் இயக்குகின்றது. சிவ சத்திக்குக் கருவிகளால் ஆகவேண்டியது ஏதும் இல்லை. உயிர்களுக்கு அப்படியில்லை; மாயைக் கருவிகள் கூடினால் மட்டுமே அவற்றோடு உரசி வாழ்வதற்காக இரு வினை

களும் எழுகின்றன. ஆதலால் பயனை அடைவது உயிரே அல்லாமல், இறைவன் ஆகான்.

இவ் வியல்புகளை விளக்கி ஒரு செய்யுள் வருகின்றது:

"மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த
தென்னு மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம்வினையாற் கண்டறிந்த நிற்குங்காண்
எண்ணான்சிவன் அசத்தை இன்று."

இதன் பொருள்:

மன்னு சிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய்—நிலைகொண்ட சிவபெருமான் திருமுன்னிலையில் நிலையாத உலகமும் உயிரும் இயங்கியது என்று கூறும் மறைநூலின் பொருளையும் அறியாமல் மறந்து பேசுகிறாயே; சொன்ன சிவன் கண்ணு உளம் வினையால் கண்டறிந்து நிற்கும் காண்—முற்றுணர்வினன் என்று சொல்லப்பட்ட சிவபெருமான் முன்னிலைக் காட்டாக நிற்றலால் உயிர் தன் வினை காரணமாக எதனையும் கண்டறிந்து நிற்கும் காண்க; எண்ணான் சிவன் அசத்தை—பொறிகளால் வரும் இன்ப துன்பப் பயனைப் பேரின்பச் சிவம் ஒரு பொருளாகக் கொள்ளான்; இன்று—அதனால் அப் பெருமான் உயிரைப்போல் அவற்றை நுகர்வதில்லை.

நிலைபெற்ற சிவன் என்பதற்கு மாறாக நிலையாத உலகம் எனக் கூறவேண்டுதலின் 'மற்று' என்றார். மறையின் இயல்—மறையின் பொருளியல்பும்; இங்கே இறந்தது தழீய எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது; காண்டலளவை, கருதலளவை, நூலளவை என்னும் அளவைகள் மூன்றில் கருதலளவையை ஒத்துக்கொள்ளாவிட்டாலும் நூலளவையையும் மறந்துவிட்டாயே என்று ஆசிரியர் இடித்துக் கூறினார். அதற்காக, இதுவரையில் சொல்லிவந்த கருதலளவையை மறந்தாலும் என்று, இறந்ததைத் தழுவிய எச்ச உம்மையை இங்கே விரித்துக் கொள்ளவேண்டும். செய்யுளில் அது வராமையால் விகாரத்தால் தொக்கது எனப்பட்டது. 'காண்' என்றது, பொறிகள் உயிர்கள் என்னும் இரண்டின் வேறு வேறுபாட்டியல்புகளைக் காண்க என்பதற்கு.

இறைவனைச் சேர்ந்த அம்மை எண்ணுதலால், வெளியே காரியங்கள் நடக்கின்றன. ஆகவே, இறைவன் திருமுன்னிலை கருத்துடைய திருமுன்னிலையாயிற்று; வெறும் முன்னிலையன்று; இரும்பை ஈர்க்கும் காந்தத்தின் முன்னிலையில், கருத்து இல்லை;

ஓரே வகையாக, ஈர்த்தல் ஒன்றே அதன் செயல்! ஆதலால் அது வெறும் முன்னிலை; அவ்வுவமை இங்கே, 'இயங்குதல்' என்ற ஒன்றுக்கே ஒப்புமையாயிற்று.

உலகமும் உயிர்களும் இயங்குதற்குத் திருக்களிற்றுப் படியாரில் ஓர் உவமை கூறப்படுகின்றது. உடல்நலத் தோடிருக்கும் மக்கள் வயிற்றில், எத்தனையோ புழுக்கள் இன்ப துன்பங்களை எய்துகின்றன; அழிகின்றன; ஆகின்றன; அது போல இறைவன் முன்னிலையில் எத்தனையோ உயிர்கள் அழிவதும் ஆவதுமாய் இன்ப துன்பங்கள் கொள்ளுவதுமாய் இயங்குகின்றன. வயிற்றுப் புழுக்களின் இன்ப துன்பங்கள், அந்நிலையில், மக்களுக்கு ஏற்படுவதில்லை. அதுபோல, உயிர்கள் ஆவதும் அழிவதும் தத்தம் வினைக்கு ஈடாக அடையும் இன்ப துன்பங்களும், இறைவன் அடைவதில்லை. எல்லாம் அவன் திருமுன்னிலையில் தாமே நடைபெற்று வருகின்றன.

இதற்குச் சிவஞானபோதத்தில் வேறோர் எடுத்துக்காட்டுச் செய்யுள் வருகின்றது.

> "வெய்யோன் ஒளியில் ஒ'டுங்கி விளங்காது
> வெய்யோனை ஆகாத மீன்போல—மெய்யவனில்
> கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
> கண்டுடனாய் மன்னுதலைக் காண்."

பொருள் :

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது வெய்யோனை ஆகாத மீன்போல—ஞாயிற்றின் ஒளியில் அடங்கி விளங்குதலில்லாமல் மறைந்து, (அந்த ஞாயிறு வேறு தாம் வேறு என்ற நிலையில், ஞாயிறே ஆகிவிடாமல் ஆனால் அதன் ஒளியைமட்டுங் கொண்டு நிற்கும் புதன் வியாழன் முதலிய) விண்மீன்களைப் போல; கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு—பார்த்தும் கேட்டும் சுவைத்தும் மோந்தும் தீண்டியும் அறிகின்ற ஐம்பொறிகள் கொள்ளும் ஐம்புலன்களை, மெய்ப்பொருளாகிய முதல்வனால் உயிர் உணர்ந்து; உடனாய் மன்னுதலைக் காண்—அம் முதல்வனோடு ஒன்றுதலும் வேறுதலும் இல்லாமல், அவன் உணர்த்துதலை மட்டும் ஏற்று, உடனாய்ப் பொருந்தியிருத்தலைக் கண்டு கொள்க.

ஞாயிற்றின் ஒளிக்கு முன் தம் ஒளி பெரிதல்லாமையால் ஞாயிற்றின் ஒளியில் விண்மீன்கள் விளங்காமல் இருக்கின்றன. இங்கே சொன்ன விண்மீன்கள் சூரியனைச் சுற்றிவரும் கோள்கள்; அவை சூரியன் ஒளியைப் பெற்று விளங்குவன.

அப்படியிருந்தும், அவை சூரியனை விட்டுத் தனித்திருப்பதில்லை. சூரியனும் தாமும் ஏதோ ஒருவகையில் ஈர்ப்புண்டு உடனுயிருக்கின்றன. அப்படித்தான் உயிர்களும் இறைவனது ஞான ஒளியைப் பெற்று அதனோடு ஒரு வகையில் தொடர்புற்றுப் புலன்களை அறிகின்றன. அதனாலேயே அவை இறைவனே ஆகி விடுவதில்லை; வேறாய்த் தனித்திருப்பதுமில்லை. அவன் முற்றுணர்வுக்கு முன் தமது சிற்றுணர்வு தெரிவதுமில்லை. ஆனால், இரண்டும் தொடர்புற்று உடனாகவே யிருக்கின்றன. இவ் வெடுத்துக்காட்டுடன் இச் செய்யுள் வந்தது.

இச் செய்யுளில், உயிர் என்னும் எழுவாய் இல்லை. முன் செய்யுளில் வந்தது; அச் செய்யுளைத் தொடர்ந்து வருதலால், இச் செய்யுளில் உயிர் கூறப்படவில்லை.

வேறோர் ஐயம் இங்கே தோன்றிவிட்டது. உயிர்களைக் கடவுள் உணர்த்துகிறான் என்றால், உயிர்கள் பலவும் பலவேறு வகையாக உணர்த்தப்படுதலால் அப் பலவேறு வகையாக இறைவனும் திரிவுபடக்கூடுமே; இறைவன் திரிபில்லாதவன் என்பது எப்படி முடியும்? என்று வியக்கத்தக்க ஓர் ஐயம் எழக் கூடும்!

இறைவன் தன் அருளிரக்கத்தால் உயிர்களை ஒரே வகையாகத்தான் உணர்த்துகிறான்; ஆனால், உயிர்களின் இயல்பு வேறுபாட்டால் வினைகள் பலவேறு வகையாகச் செய்யப்படுகின்றன; அவ் வினைகளுக்கேற்றபடி உயிர்கள் பலவேறு வகையாக இன்ப துன்பங்கள் உணர்கின்றன. இரக்கத்தால் உணர்த்துகிறவன், பலவேறு வகையாக. வேண்டுமென்றே உணர்த்தான்.

இறைவன் அருள், சூரியன் ஒளியைப் போன்றது. சூரியனின் ஒளி வானத்தில் ஒரே வகையாகத்தான் வீசுகிறது. ஆனால் அதனைப் பெறுகின்ற தாமரைப் பூடுகளில் ஒன்று தழைக்கிறது, ஒன்று அரும்புகிறது, ஒன்று மலர்கிறது, ஒன்று வாடுகிறது; இப்படிப் பலவேறு திரிபுகளைத் தாமரைப் பூடுகள் எய்துகின்றனவே ஒழியச் சூரிய ஒளி எய்துவதில்லை. அதுபோலத் தான் இறைவனது அருளும், ஒரே வகையாக உயிர்களை உணர்த்தும் ஆற்றலைச் செய்தாலும், உயிர்கள் பலவேறு வகையாக அவ்வுணர்த்துதலைப் பெறுகின்றன. இதனால் அருளும் இறைவனும் திரிவு கொள்வதில்லை. கருவிகள் இல்லாமல் எண்ணத்தின் அளவில் இயங்க வைக்கும் திருமுன்னிலைகளுக்குத் திரிவு கூறுவதற்கில்லை. திருமுன்னிலையின் சிறப்பு இது!

காரணம், ஈசன் என்பவன் அருளோடு (இரக்கத்தோடு) கூடியிருப்பவன்; மாயைக் கருவிகளோடு கூடியிருப்பவன் அல்லன்; ஞானக்கண் உடையவர்களுக்கு இவ்வியல்பு தெரியும். அவர்களுக்குக் கடவுள் சூரியனைப்போல் தோற்றுவான். சூரியனுக்கு ஒளி இருப்பதுபோலக் கடவுளுக்கும் இரக்கம் என்னும் அம்மை இருக்கிறது. இதற்குரிய செய்யுள்,

"அருளுண்டா மீசற் கதசத்தி அன்றே;
அருளும் அவனன்றி இல்லை;—அருளின்
றவனன்றே யில்லை; அருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோல் நிற்குமரன் ஏய்ந்து."

இதன் பொருள் :

ஈசற்கு அருள் அன்றே உண்டாம்—கடவுளுக்கு இரக்கம் என்பது தொன்மையாகவே உள்ளதாகும்; அது சக்தி—முதல்வனுக்கு அது ஆற்றலையுடைய எனப்படும்; அருளும் அவனன்றி இல்லை—இரக்கம் என்னும் அம்மையும் அப்பன் அல்லாமல் தனியாக இல்லை; அருள் இன்று அவன் அன்றே இல்லை—இரக்கம் இல்லாமல் அவனும் தோன்றுதொட்டில்லை. (இங்ஙனம் ஒருவரையொருவர் இன்றியமையாதவராய் இணைந்திருப்பர்.) அருட்கண்ணார் கண்ணுக்கு—ஞானக் கண்ணுடைய அடியார்களின் பார்வைக்கு; இரவிபோல் அரன் ஏய்ந்து நிற்கும்—சூரியனும் அதன் ஒளியும் ஒன்றுபட்டு ஒரு பொருளாய் நிற்பதுபோல் கடவுள் அம்மையுடன் ஒன்றாகவே பொருந்தி நிற்பான்.

இச் செய்யுளில் சூரியன் எடுத்துக்காட்டாக வந்தது. சூரியன் இருளை ஓட்டுவதுபோல், இரக்கம் என்னும் அருளால் உயிர்களின் மருளை இறைவன் ஓட்டுவான்.

இரக்கம் இறைவனுக்குக் குணம்போலவும் இறைவன் அக் குணத்தை உடைய பொருள்போலவும் தோற்றும்; இவற்றின் தொடர்பு ஒருவாற்றால் ஒற்றுமையும் மற்றொருவாற்றால் வேற்றுமையும் உடையது. இங்ஙனமே சூரியனும் அதன் ஒளியும் உள்ளன; ஆண் பெண் இயல்பு இத்தகையன; அதனாலேயே இறைவனை அப்பனாகவும் அருளை அம்மையாகவும் சொல்வது வழக்கமாயிற்று.

உலகத்தில் பெண் என்பது ஒரு தனிப் பொருளாகத் தானே இருக்கின்றது என்று கேட்கத்தோன்றும்.

(தொடரும்)

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எஸ்.]

(சிலம்பு ருஉ, பரல் ௩, கசஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

பெரியாழ்வார் திருமொழியில் 'கச்சொடு பொற்சுரிகை காம்பு கனகவளை' (8) என்று கூறப்பட்டுள்ளது. காம்பு என்பதற்குச் சிறு காம்பன் சேலை என்றும், பட்டுச்சேலை என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. ஆதலின் காம்பு என்பது சிறந்த பட்டுத்துணி என்பது தெளிவாகின்றது. பட்டுடைகளில் சில கொட்டைக் கரையுடையனவாகக் கூறப்பட்டுள்ளன.

"பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்"
—பொருநராற்றுப்படை 153-155

பட்டுடைகளில் கரையுடன் தும்புடையவை இருந்தன. கொட்டை என்பதே இக் காலத்தில் குஞ்சம் என்று அழைக்கப்படுவதாகத் தெரிகின்றது. 'கொட்டையம் புரோசை' என்பதற்குத் "தலையில் மணி முடியையுடைய புரோசைக் கயிற்றை" என்று சீவகசிந்தாமணி (1835) உரையில் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். கரையுடைய பட்டாடையின் ஓரத்தில் நூலால் மணிமுடிச்சு போடப்பட்ட ஆடை என்று தெளிவாகின்றது. மணிமுடிச்சு என்பது பலவகையான முடிச்சுக்களில் ஒன்றாகும். இம் முடிச்சுக்கள் கப்பலில் பயன்படுத்தும் கயிறுகளிலும் போடுவதுண்டு. மணிமுடிச்சு, படிமுடிச்சு, சங்கிலி முடிச்சு என்று பல முடிச்சுக்களின் பெயர்கள் இன்றும் கூறப்படுகின்றன. மணி முடிச்சு போன்ற முடிச்சுக்கள் இன்று ஆங்கிலேயர் கப்பற்படையில் பயன்படுத்தினும் சோழர் காலத்துச் சிற்பங்களில் கருங்கல்லில் இந்த முடிச்சுக்களை உருவாக்கிக் காட்டியிருப்பது போற்றத்தக்கதாகும்.

பட்டுப் புடைவைகளை மகளிர் அணிந்திருந்ததைப்பற்றி அகநானூறு கூறியுள்ளது. கூதிர் காலத்தில் பட்டுடுத்துவது வழக்கம் என்று தெரிகின்றது. சிவந்த பட்டைக் கார் காலத்தில் மகளிர் உடுத்தினதைப்பற்றிச் சிலப்பதிகாரம் கூறியுள்ளது.

"அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரி னெடுங்கிய விருக்கை" —அகம் 236

"அரத்தப் பூம்பட் டரைமிசை யுடீஇக்" —சிலம்பு 14 : 86

அம்பட்டு, பூம்பட்டு என்பவை அழகிய பட்டையும் பூத்தொழிலை யுடைய பட்டையும் குறித்தன என்று தெரிந்துகொள்ளலாம். ஆடவரும் அரத்தப்பட்டுடுத்தினர் என்பது "பொங்கொளி யரத்தப் பூம்பட் டுடையினன்'' என்று வணிகப் பூதத்தைச் சிலப்பதிகாரம் வர்ணிப்பதிலிருந்து தெரியலாம். ''தீம்பானுரை போற் றிகழ் வெண்பட் டுடுத்து'' என்று சீவகசிந்தாமணி (3046) கூறுவதால் வெண்பட்டை அணிவதுண்டு என்பது தெரிகின்றது. வெண்பட்டைக் கட்டிலில் விரித்துப் படுப்பதைப் பற்றிப் "பால்பரந் தன்ன பட்டார் பூவணை பசும்பொற் கட்டில்'' (547) என்று சீவகசிந்தாமணியில் சொல்லப்பட்டுள்ளது. பட்டுக்கச்சால் கட்டிய கட்டிலைப் பற்றிச் சீவகசிந்தாமணியும் பெருங்கதையும் (சிந்தாமணி 2070, பெருங்கதை 3. 5 : 56) கூறியுள்ளன. பட்டோலையில் அரசர் செய்தி விடுப்பதும் மணக் காலத்தில் பரிசுகள் எழுதப்படுவதும் நூல்களில் கூறப்பட் டுள்ளன. ''பட்டோலை வாசியா நின்ருன் நன்மரம்'' என்றும், "பட்டோலை வாசித்தவ ரவர்க்குள்ள பரிசிலெல்லாம்'' என்றும் தனிப் பாடல்களில் பட்டோலை கூறப்பட்டுள்ளது. வடமொழியில் "பட்டோலா'' என்பது ஒருவகை ஆடையின் பெயராகக் கூறப்பட்டுள்ளது. பட்டோலைக்குப் பயன்பட்ட பட்டுவகை தனித்தொன்ருக இருந்திருக்கலாம்.

கலிங்கம் என்ற சிறந்த துகிலாடை சங்க காலத்திலிருந்தது. மிகப் பண்டைக்காலத்தில் கலிங்க நாட்டில் நெய்யப் பட்டுத் தமிழ்நாட்டிற்கு வந்த ஆடையானதால் கலிங்க நாட்டின் பெயரால் இந்த ஆடை அழைக்கப்பட்டது. சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் இந்த ஆடைவகை தமிழ் நாட்டிலேயே நெய்யப்பட்டதென்பது தெரிகின்றது. நெய்யப் பட்ட நாட்டின் பெயராலும், நகரத்தின் பெயராலும், இடத்தின் பெயராலும் ஆடைகளின் பெயர்களை அழைக்கும் வழக்கம் இன்றும் உள்ளதைக் காணலாம். 'காலிக்கோ' என்ற ஆடைப் பெயர் கள்ளிக்கோட்டையின் ஆங்கிலப் பெயரிலிருந்து தோன்றியதைக் கவனிக்க வேண்டும். இப்போது ஒரிசா என் றழைக்கப்படும் நாட்டிற்கும் கஞ்சம் பகுதிக்கும் இடையிலிருந்த நாடு கலிங்கம் என்றழைக்கப்பட்டது. கலிங்க நாட்டைப் பற்றிச் சிலப்பதிகாரமும் (23 : 138) மணிமேகலையும் (26 : 15) குறிப்பிட்டுள்ளன. கலிங்கம் என்ற ஆடை முற்காலத்தில் தனித்ததோர் ஆடைவகையைக் குறித்து வழங்கினுலும் பிற் காலத்தில் ஆடையின் பொதுப் பெயராக மாறிற்று. இன்றும் ஒரிசா நாட்டு ஆடைகள், தனித்தன்மையுடையனவாகக் கருதப்

படுகின்றன. "Characteristic orissa fabrics with colour stripes" என்று கூறப்படுகின்றது. கலிங்க ஆடையைச் சங்க காலத்தில் மணஞ்செய்யும் மகளிர் அணியும் புத்தாடையாகவும், மண ஆடையாகவும் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

"பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குற்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்
தொடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ" —அகம் 86

"தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பின்எம் உயிருடம்பு படுவி
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்
பெரும்புழுக்கு உற்றநின் பிறைநுதல் பொறிவியர்"
—அகம் 136

கலிங்கப் புடைவையைக் கோடி ஆடையாக அணிந்ததால் "முருங்காக் கலிங்கம்" என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இப்போதைய கூறைப்புடைவை (கூறை நாட்டுப் புடைவை) போன்று அக் காலத்தில் கலிங்கப் புடைவையை மண ஆடையாக மகளிர் அணிந்தனர்.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்" —குறுந்தொகை 167

"பாம்புரி யன்ன வடிவன காம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா
ஒண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்" —புறம் 383

"இழைமருங் கறியா நுழைநூற் கலிங்க
மெள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ"
—மலைபடுகடாம் 561-562

"உடையோர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு" —நற்றிணை 90

"நெய்யும் குய்யும் ஆடி மையொடு
மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்" —நற்றிணை 380

"சோறமை வுற்ற நீருடைக் கலிங்க
முடையணி பொலியக் குறைவின்று கவைஇ"
—மதுரைக் காஞ்சி 721-722

"காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடமை தூமடி விரித்த சேக்கை"
—நெடுநல்வாடை 134-135

"பூந்துகின் மரீஇய வேந்துகோட் டல்கு
லம்மா சூர்ந்த வவிர் நூற் கலிங்கமொடு"
—நெடுநல்வாடை 145-146

"நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை"
—திருமுருகாற்றுப்படை 109

"கோடிக் கலிங்க முடுத்துக் குழல்கட்டி" —சிலம்பு 21-32

"நுரைஎயன விரிந்த நுண்பூங் கலிங்கம்
புலரா துடுத்த வுடையினன் மலரா" —சிலம்பு 22; 21-22

"வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்க ரன்ன சிவந்துநுணங் குருவிற்
கண்பொரு புகூஉ பொண்பூங் கலிங்கம்
—மதுரைக்காஞ்சி 431-433

"சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்
பொன்னுரை காண்மருங் கலிங்கம் பகர்நரும்"
—மதுரைக்காஞ்சி 512-513

"நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்பப்"
—மதுரைக்காஞ்சி 552-554

"ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்" —புறம் 392

"தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமும்" —புறம் 393

"பாசி யன்ன சிதர்வை நீக்கி
யாவி யன்ன வவிர் நூற் கலிங்க
மிரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்"
—பெரும்பாணாற்றுப்படை 468-470

கலிங்கம் ஒருவகை நல்லாடை என்று புறநானூற்று உரையில் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். கலிங்கம் என்ற ஆடைவகையை ஆடவரும் பெண்டிரும் அணிந்திருந்தனர் என்பது தெரிகின்றது. புறநானூற்றில்

கலிங்க ஆடையானது மூங்கிற் கோலின் உட்புறத்தே எடுக்கப் பட்ட மெல்லிய தோல்போல இருந்ததென்றும், நெய்யப்பட்ட இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாதபடி நுண்மையாக இருந்ததென்றும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். ஆவி போன்று அவிர் நூல்கலிங்கம் இருந்ததாகவும் கூறப்பட் டுள்ளது. கலிங்க ஆடையில் வெண்மையானவையும் சிவந் தவையும் இருந்தன. முருகப்பெருமான் சிவந்த கலிங்க ஆடையைத் தொடையின்மேலே கிடக்கும்படி அணிந்திருந் தார் என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. "நுரை யுரை கலிங்கம்" என்று பெருங்கதை (2. 5 : 86) கூறுகின்றது. கலிங்கத்தில் பூத்தொழில் செய்யப்பெற்ற கலிங்கம் சிறந்த தாகக் கருதப்பட்டது. புலவர் ஒருவரின் கிழிந்த ஆடையை நீக்கி அன்று விரிந்த பகன்றைப் புதுமலர் போன்ற கலிங் கத்தை உடுக்கவைத்த அரசனைப் பற்றிப் புறநானூறு கூறி யுள்ளது. பூத்தொழில் எவ்வளவு நுண்ணியதாக இருந்த தென்பதைச் "சிவந்து நுண்ணிதாகும் வடிவாலே கண்களை வெறியோடப் பண்ணிச் சிந்தி விழுமாறு போன்ற ஒள்ளிய பூத் தொழிலையுடைய சேலைகளை (ஆடைகளை) செல்வர் அணிந் தனர்" என்று மதுரைக் காஞ்சி வரிகளுக்கு (431-433) நச்சினர்க் கினியர் கூறிய விளக்கத்திலிருந்து புரிந்துகொள்ளலாம். பார்ப்போர் கண்களை மயக்கும்படி நுண்ணிய பூத்தொழிலோடு நெய்யப்பட்ட கலிங்க ஆடைகள் மதுரையில் விற்கப்பட்டன. புகாப்புகர் என்று குறிப்பிடப்படும் சிறிய பூத்தொழிலையுடைய கலிங்க ஆடைகளும் இருந்தன. இந்தப் பூத்தொழில் இன் றைய புட்டாப் புடைவையைப் போன்றதாகும். கலிங்க ஆடை களில் கரையுடைய ஆடையைப் பற்றியும் சங்க நூல்கள் கூறி யுள்ளன. கலிங்க ஆடைகளில் சிலவகை துகிலைவிடச் சிறப்புற்ற வையாக இருந்தன. முன்பு பூத்தொழிலையுடைய துகில் கிடந்த அல்குலில் இக்காலத்து உடுத்த அழகிய மாசேறிய நூலாற் செய்த கலிங்கப் புடைவையென்று நெடுநல்வாடை (145-146) கூறுவதிலிருந்து தெரிகின்றது. கலிங்க ஆடையைப் படுக்கை விரிப்புகளாகவும் ஆடவர் அரையில் அணியும் வேட்டியாகவும் பயன்படுத்தினர். கலிங்க ஆடையைச் 'சோறமைவுற்ற நீரில்', அஃதாவது கஞ்சியில் தோய்த்தும் காடியால் கழுவியும் உடுத் தினர். கலிங்க ஆடைக்கு நறுமணத்தை ஊட்டி உடுத்தினர் என்று தெரிகின்றது. கலிங்க ஆடைகளில் சிறந்ததொன்றாக நீலநாகம் நல்கிய கலிங்க ஆடை கூறப்பட்டுள்ளது.

"நீல நாக நல்கிய கலிங்க
மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த"

—சிறுபாணாற்றுப்படை 96-97

பாம்பு ஈன்று கொடுத்த ஒளிவிளங்கும் நீலநிறத்தையுடைய கலிங்கம் என்று கூறியிருப்பதால் இஃது ஒரு சிறந்த கலிங்க ஆடை என்று தெரிகின்றது. பாம்பு ஈன்று கொடுத்தது என்ற செய்தியிலிருந்து நாக இனத்தினரால் நெய்யப்பட்ட சிறந்த ஆடையெனக் கருதலாம். நாகம் என்பதற்கு "நற்றூசு" என்று பிங்கலந்தை நிகண்டில் பொருள் கூறப்பட்டுள்ளதைக் காண லாம். "நாகமடிப்பட்டு" என்ற ஒருவகை ஆடையைப் பல்கலைக் கழக அகராதி குறிப்பிட்டுள்ளது. நீல நாகம் என்பது ஆங்கிலத்தில் "அரச நாகம்" (king cobra) என்றழைக்கப் படுவதாகும். இது காடுகளில் வாழ்வது. கருமை நிறம் மிக்கது. இதன் நஞ்சு மிகக் கொடியது. மற்ற பாம்புகளைத் தின்று வாழ்வது. இதைப் புறநானூறு "அரசரா" என்று அழைத்துள்ளது. மலையாள மொழியில் சங்ககால மரபில் "கருங்குறிஞ்சி" என்று இந்தக் கருநாகத்தை அழைப்பர். அடர்ந்த மலைக் காடுகளில் வாழும் கருநாகத்தைக் கருங்குறிஞ்சி என்று மலையாளக்காட்டு மக்கள் அழைப்பதில் சங்க மரபின் மணம் கமழ்வதைப் பார்க்கலாம். இந்த நாகத்தையே நீல நாகம் என்று கூறினர். அரசு அராவான நீலநாகம் நல்கிய கலிங்கம் மிகச் சிறந்ததாக இருந்திருக்க வேண்டும் என்றும் கருதலாம். இதனைச், சிறந்த நாக அரசு பரம்பரையினர் நெய்த ஆடையாகக் கருதலாம். இன்றும் இந்தியாவின் வட கிழக்குப் பகுதியில் வாழும் நாக இனத்தினர் சிறந்த ஆடை வகைகளை நெய்கின்றனர் என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஆய் அண்டிரன் ஈந்த ஆடைபோன்றே கானமயிலுக்கு ஆவியர் பெருமகன் பேகன் ஈந்த ஒரு கலிங்கமாகிய போர்வை யும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
அருந்திற லணங்கி னாவியர் பெருமகன்"

—சிறுபாணாற்றுப்படை 84-86

கானமஞ்ஞை நடுங்குவதாகக் கருதி அதற்குத் தனது கலிங்கப் போர்வையை அளித்த பேகனைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இந்தப் போர்வையும் சிறந்த கலிங்க ஆடையாக இருக்க வேண்டும்.

சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட வெள்ளைக் கலிங்கத்தைப் போன்றே மாணிக்கவாசகரும் வெள்ளைக் கலிங்கத்தால் ஆன ஆடவர் உடையைக் கூறியுள்ளார்.

"வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக்குப் பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரிமேற் கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னே என்னும்"

என்று சிவபெருமான் வெள்ளைக் கலிங்கத்தை உடுத்துச் சட்டையணிந்து குதிரைமேல் வந்த தோற்றத்தை மாணிக்கவாசகர் வர்ணித்துள்ளார். "வெள்ளைக் கலிங்கம்" வெண்மையான வேட்டியைக் குறிப்பதாகத் தெரிகின்றது. பிற்காலத்தில் கலிங்கம் என்ற பெயர் பொதுப் பெயராக எல்லாவகை ஆடைகளையும் குறித்தது. இரட்டைப் புலவர் "இக் கலிங்கம் போனல் என் ஏகலிங்க மாமதுரைச் சொக்கலிங்கம் உண்டே துணை" என்று பாடிய காலத்தில் கலிங்கம் பொதுவாக ஆடையைக் குறித்தது. (தொடரும்)

---

## பொங்கல் திருநாள்!

[புலவர். நெல்லை ஆ. கணபதி, எம்.ஏ., பி.லிட்.]

தேனினும் இனிய கரும்புமஞ் சளுடன்
செந்நெலும் காய்கனி கிழங்கும்
தீஞ்சுவை அமுதாம் சர்க்கரைப் பொங்கல்
தெவிட்டிடத் தருகிற தைநாள்!

வானிலே கதிர்கள் வீசிடும் வெய்யிலை
வணங்கிடும் தமிழரின் திருநாள்
வைகறைப் போதில் வயல்களில் உழுது
வாழ்ந்திடும் உழவரின் நன்னாள்!

தானுமோர் துணையாய்ப் பயிர்த்தொழில் செழிக்கத்
தான்உழைத் திடுங்கால் நடைகள்
தழைத்திட மாட்டுப் பொங்கலும் இடும்நாள்
தமிழரின் நன்றியின் பெருநாள்!

ஆனதோர் பொங்கல் தமிழ்த்திரு நாளாம்!
அன்னையாம் செந்தமிழ்ச் செல்வி!
அணிபெறும் ஒருநாள்! வாழ்த்துகள் கூறி
அனைவரும் போற்றுவோம்! வாழி!

---

# தமிழ்த்தாய் வாழ்த்து

[திரு. கு. கோதண்டபாணி பிள்ளை]

கலிப்பா

(தரவு)

அமைவுற்ற நிலவுலகை அழித்தகடல் பெருவெள்ளத்(து)
இமயக்கல் எழுதருமுன் எழுகோடி பல ஆண்டும்
அமைவழியா நிலப்பகுதி அழிவறியாத் தமிழகமே
அமைத்தெழுந்த தமிழ்மொழியை அளித்ததுகாண் உலகிற்கே

(தாழிசை)

உலகவாழ் வெனுமுறைகள் உறவாழ்ந்த திருமகளாய்
உலகுவந்த இமையவளாய் உனைத்தொழுவோம் தமிழ் அன்னாய்!
உலகத்தின் முதல்மொழியாய் உயர்தனிச் செம்மொழி யானாய்
இலக்கணத்தின் வரம்பதனால் இறவாத வரம்பெற்றாய்
அலகில்சொல் பிறர்அமைக்க அடிமுதல்கள் அளித்தனையால்
உலகின்பம் உறக்காணும் உயர்இலக்கம் உணர்த்தினையால்
உலகுவப்பப் பொதுநெறிகொள் பொதுமறையொன்
[றுதவினையால்
உலகமெலாம் தழுவிஎழு உயர்அன்பு படைத்தனையால்
பழகியபின் விடல்இயலாப் பலஅயலார் பணிபுரிய
பழமைக்கும் பழமையை நீ; புதுமைக்கும் புதியை நீ;
பழமையினிற் பதிந்தெழுந்த புதுமையதன் புதுமலர் நீ;
அழஉருக்கும் மணிமொழியார் அமுதமொழி அருளினை நீ
அதனால்,
என்றும் தொழுவம்உன் எழிலார் திருவடி
என்றும் மறவோம் ஏற்போம் உன்பணி
அன்பே கடவுளென் றருளினை போற்றி
என்றும் உளஉன் இறைமை வெல்க!
என்றும் உன்எழில் இளமையும் வெல்க
வாழ்கபல் ஆண்டு வளர்க நின்புகழ்
வாழ்கபல் ஊழி வழிவழி சிறந்தே!

———

# அயல்நாட்டார் குறிப்புக்களும் அருந்தமிழிலக்கியச் சான்றுகளும்

[டாக்டர். க. ப. அறவாணன்

தக்கார் பல்கலைக் கழகம், செனகால்.]

தென்னிந்திய வரலாற்றை எழுதிய அறிஞர் இலக்கியச் சான்றுகளைத் தலைமைச் சான்றாகப் போற்றிக் கொள்வதில்லை. இன்னபிற கல்வெட்டுக்கள், நாணயங்கள், அயல்நாட்டார் குறிப்புக்கள் முதலாயவற்றை முதன்மைச் சான்றுகளாகப் போற்றுவர். தமிழ் இலக்கியச் சான்றுகளைக் குறிப்பாகச் சங்க கால இலக்கியச் செய்திகளைப் புனைந்துரை என்றோ, பொய்யுரை என்றோ ஒதுக்குதற்கு இடமில்லை. ஏனெனில் சங்க இலக்கியங் களில் பேசப்பட்டுள்ள செய்திகளை அவ்வக் காலத்துக் கிடைத்த கல்வெட்டுக்கள், நாணயங்கள் உறுதி செய்கின்றன. சான்றாகப் பதிற்றுப்பத்தில் உள்ள சேர அரசர் மரபைப் புகலூர்க் கல் வெட்டு (கி. பி. 2 ஆம் நூற்றாண்டு) வழிமொழிகிறது. பயன் அறவு அறியா யவனர் இருக்கையையும் யவன மாதர்களின் வரவையும் உறவையும் அரிக்கமேட்டில் கிடைத்த உரோம நாணயங்கள் உறுதி செய்கின்றன. கல்வெட்டுக்களும் நாண யங்களும் தமிழ் இலக்கியச் சான்றுகளை உறுதி செய்வது போலவே அயல்நாட்டார் குறிப்புக்களும் தொன்மைத் தமிழிலக் கியச் சான்றுகளை மெய்ம்மையாக்குகின்றன.

கி. மு. ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கித் தமிழ் நாட்டைக் குறிப்பிடும் அயல் நாட்டார்தம் பயணக் குறிப்புக்கள் கிடைத் துள்ளன. இக் குறிப்புக்கள் கிரேக்க, இலத்தீன், அரபு, சீன, பாரசீக ஆசிரியர்களால் எழுதப்பட்டவை. எனினும் இவற்றுள் பெரும்பாலான ஆங்கிலத்திலும் ஃபிரஞ்சிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. இம் மொழிபெயர்ப்புக்களை மையமாக வைத்தே இக் கட்டுரை வரையப்படுகிறது.

## 1. குமரிக் கண்டம்:

தென்னிந்தியாவைப் பற்றி முதன்முதல் கிடைத்துள்ள குறிப்பு 'ஏரோடேட்டசு' என்ற கிரேக்கருடையதாகும். கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இவருடைய குறிப்பு கறுப்பு நிறமும் சுருட்டை முடியும் உடைய திராவிட மக்களைக் குறிப் பிடுகிறது. ஆப்பிரிக்கரை ஒத்த தோற்றமுடைய மக்கள்

திராவிடத்தில் வாழ்ந்தனர் என்பதற்கு இது முதன்மைச் சான்றாகும். இந்தியாவை ஒட்டி இருந்த நிலமண்டலம் தனித்தீவா அல்லது ஆப்பிரிக்காவோடு இணைந்த ஒரு கண்டமா என்ற ஐயம் தாலமி, (கி. பி. 2ஆம் நூற்றாண்டு) பெரிபுளுசு (கி. மு. முதல் நூற்றாண்டு) நூலாசிரியர் காலத்திலும் இருந்திருக்கிறது. இந்த நிலத்தீவை இலங்கை என்று கருதுவதைக் காட்டிலும் தமிழிலக்கியங்களில் வருணிக்கப்படும் குமரிநிலம் என்று நினைப்பதற்குப் பிளினியின் குறிப்புகள் இடம் தருகின்றன. 'தப்பிரபானே' என்று இந்த நிலம் பிளினியால் குறிக்கப்படுகின்றது. அதனுடைய நீளம் 7000 இசுடேடியா (1400 கி. மீ.) (5 இசுடேடியா = 1 கிலோ மீட்டர்), அதன் அகலம் 5000 இசுடேடியா (1000 கி. மீ.). இலங்கைத் தீவு தெற்கு வடக்காக 432 கி. மீ நீளமும், கிழக்கு மேற்காக 224 கி. மீ. அகலமும் உடையது. இம் மட்டுமன்றி தப்பிரபானே பற்றிப் பிளினி வருணிக்கின்ற செய்திகளும் அஃது இலங்கை அன்று என்பதை உறுதி செய்கின்றது. பிளினியின் விளக்கப்படி தப்பிரபானேயில் 5000 நகரங்கள் இருந்தன. பலீசிமுண்டசு என்னும் நகரம் மிகவும் புகழ் பெற்றது. அரசன் அங்கேதான் தங்கி இருந்தான். அந் நகரின் மக்கள் தொகை 2,00,000. உள்நாட்டில் 'மெகிசிபா' என்னும் ஏரி ஒன்று இருந்தது. அதன் சுற்றளவு 600 கி. மீ. அந்த ஏரியிலிருந்து இரண்டு ஆறுகள் தோன்றிப் பாய்கின்றன. ஒன்றின் பெயர் பலீசுமுண்டசு. அந்த ஆறு அதே பெயருடைய நகரைக் கடந்து அருகிலுள்ள துறைமுகத்தை அடைகின்றது. துறைமுகத்தைச் சேருவதற்கு முன் அவ் வாறு மூன்று கிளைகளாகப் பிரிகின்றது. அவற்றுள் ஒரு கிளை ஆற்றின் அகலம் ஐந்து இசுடேடியா, அதுவே மிகக் குறுகியது. 15 இசுடேடியா அகலமுடைய 'சைதரா' என்ற ஆறே மிக அகலமுடையதாகும். அஃது இந்தியாவை நோக்கி வடதிசையில் ஓடுகிறது. (குமரி ஆறு அல்லது புறநானூற்றில் குறிக்கப்பெறும் பஃறுளி ஆறு இது வாதல் கூடும்.) தப்பிரபானேக்கு மிகவும் அருகிலுள்ள இந்தியப் பகுதியை 'கொலியகம்' என்று பிளினி குறிக்கிறார். இது குமரி முனையைக் குறிக்கலாம். 'குமரியகம்' என்பது 'குமலியகம்' 'கொலியகம்' என்று அயல் நாட்டாராகிய பிளினிக்குக் காதில் விழுந்தது போலும். அபுல்பேடா (கி. பி. 1273) குமரியைக் 'கொம்காரி' என்பர்.

மெகத்தனீசு எழுதியுள்ள குறிப்பும் பிளினி குறிப்பை உறுதி செய்கிறது. அவரும் தப்பிரபானேயின் நீளம் 7000 இசுடேடியா என்றும் அகலம் 5000 இசுடேடியா என்றும் குறித்

துள்ளார். அந் நிலம் மிகவும் நீளமானது என்றும் மலைப்பாங்கானது என்றும் குறிப்பிடுவர். குமரிக்கோடு என்ற ஒன்று இருந்ததாக இளங்கோ அடிகளும், தொல்காப்பிய உரையாசிரியர்களும் குறிப்பிடும் 'குமரிமலை' இதுவாதல் கூடும். மெகத்தனிசு குறிப்பிடும் மேலும் சில செய்திகள் குமரிநில உண்மையை வற்புறுத்துகின்றன.

''தப்பிரபானேக்கும் தலைநிலத்திற்கும் (தமிழகம்) இடையில் ஓர் ஆறு ஓடுகிறது. அதனால் தப்பிரபானே தலைநிலத்திலிருந்து பிரிந்திருக்கிறது. அங்கு வாழும் மக்கள் 'பலையோ கோனாய்'" என்று குறிக்கப்படுவர்.

மெகத்தனிசு குறிப்பிடும் ஆறு குமரி ஆறு போலும். அவர் சுட்டிக் காட்டும் 'பலையோ கோனாய்' என்ற மக்களினம் பழைய கோனார் என்பதன் திரிபு போலும். கோனார் என்பது கோன் + ஆர் என்று அரசர்களைக் குறிப்பிடும் மதிப்புச் சொல். குமரி நாட்டை இழந்த பாண்டியர் என்ற சொல் பண்டு என்ற சொல்லடியாகப் பிறந்தது என்பர் பரிமேலழகர். பாண்டியர் என்பதற்கு மிகப் பழைய மக்கள் என்பது பொருள். 'பலையோ' என்ற மெகத்தனிசு குறிப்பு பழைய என்ற சொல்லின் எதிரொலி போலும். சங்க இலக்கியத்தில் 'பழையர்' என்ற அரச இனம் குறிக்கப் பெறுவதும் இங்கே இணைத்து நினைக்கத்தக்கது. பாண்டிய நாட்டைப் 'பண்டைய நாடு' என்று மெகத்தனிசு குறிப்பதும் இங்கே கருதத்தக்கது.

இணைந்த குமரி கி. பி. 75 அளவிலேயே கடலால் விழுங்கப் பட்டுக் குமரி முனையாக எஞ்சி நின்றதைப் 'பெரிபுளூசு' என்ற நூற்குறிப்புக் காட்டுகிறது. பெரிபுளூசின் குறிப்பு வருமாறு':

> 'கொமாரி என்னும் இடமிருக்கிறது அங்கேதான் குமரி முனையும் துறைமுகமும் இருக்கின்றன. தங்களுடைய வாழ் நாளில் எஞ்சிஉள்ள பகுதியைத் தூயதொண்டிற்கெனப் பயன் படுத்த விரும்பிய மாந்தர் குமரிமுனையில் குடியேறுவர்; குமரிக் கடலில் நாள்தோறும் நீராடுவர். பெண்டிருடன் உடலுறவு கொள்ளாது வாழ்வர். பெண்டிரும் அத்தகைய தூயதுறவு வாழ்க்கையை மேற்கொள்வர். குமரி முனையில் முன்னொரு காலத்தில் ஒருபெண் தெய்வம் அவ்வாறு வாழ்ந்ததாகக் கூறுவர்."

பெரிபுளூசின் மேற்கண்ட குறிப்பு 'குமரியம் பெருந்துறை ஆடி வடதிசைக்கு ஏகுவிராயின்' என்ற பிசிராந்தையின் புறநானூற்று அடிகளையும் மணிமேகலையில் இடம் பெற்றுள்ள குமரிக்குத் தூய நீராடச் செல்லும் பார்ப்பன வாழ்க்கையையும் உறுதிப்படுத்துகிறது.

2. மனுநீதிச் சோழன் :

சிலப்பதிகார வழக்குரை காதையில் கண்ணகி தன் குல வரலாற்றைக் கூறும்பொழுது,

'வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்'

என்று குறிப்பாள். இங்கே குறிக்கப்படும் சோழ வரலாறு சேக்கிழாரால் திருவாரூர் நகரச் சிறப்பாக மனுநீதிச் சோழனின் வரலாறு விரித்துரைக்கப்படும். சிலப்பதிகாரம், பெரிய புராணம் ஆகிய இரண்டும் காட்டும் இக் குறிப்புகளிலிருந்து அரசர்தம் அரண்மனை வாயிலில் ஆராய்ச்சிமணி தொங்கவிடப்பட்டிருக்கும் என்று அறியப்படும். 'India in the Fifteenth Centuary' என்ற நூலின் ஆசிரியர் (பக். 13) ஆராய்ச்சி மணி கட்டும் செய்தி கட்டுக்கதை என்று குறிப்பிட்டுள்ளார். 'சாங்டே' என்பவர் கி. பி. 1259 இல் இந்தியாவைப் பற்றி எழுதி வைத்துள்ள குறிப்பு மேற்கண்ட இலக்கியச் செய்தியை அரண் செய்கிறது. அக் குறிப்பு வருமாறு :

'அரசனுடைய அரண்மனை முகப்பில் பெரிய மணிகள் கட்டப்பட்டிருக்கும். குடிமக்களுள் யாருக்கேனும் குறை நேர்ந்தால் அரண்மனை வாயில்மணியை அடிப்பர். அடித்தவர்களுடைய பெயர்களும், வழக்குகளும் பதிவு செய்யப்படும். வழக்குகள் விசாரிக்கப்படும். உரிய நீதி வழங்கப்படும்.'

இப் பயணக் குறிப்பு தமிழ் இலக்கியச் செய்தியை உறுதி செய்வதுடன் சேக்கிழார் காலத்தை ஒட்டியே (கி. பி. 1259) எழுதப்பட்டிருப்பதும் பார்வைக் குரியது.

3. மன்னன் நன்னனின் வரலாறு :

சங்க இலக்கியத்தில் பேசப்படும் நன்னனின் வரலாறு அனைவரும் அறிந்த ஒன்றாகும். நன்னனுக்குரிய காவல்மரமாகிய மாமரத்தினின்று ஆற்றில் விழுந்த மாங்கனியைக் காவலனுக் கறிவிக்காமல் ஒருபெண் எடுத்துத் தின்றுவிட்டாள் என்பதும், திருட்டுக் குற்றம் சாற்றப்பட்டு அவள் தண்டிக்கப் பட்டாள் என்பதும், அன்று தொட்டு நன்னன் பெண்கொலை புரிந்த மன்னன் என்பதும் சங்க இலக்கியத்தால் சாற்றப் படுவன. இச் செய்திகள் இலக்கியத்தை மட்டுமே படிப் பார்க்குக் கற்பனை எனத் தோன்றும். ஆனால், அயல்நாட்டார்

குறிப்பு, இலக்கியச் செய்திகளை வழிமொழிவதுடன் தமிழர்தம் பண்டைய வழக்கம் என்றும் நாட்டுகிறது. கி. பி. 1333—45இல் வாழ்ந்த இபன்பதூதா என்ற அராபியப் பயணியின் அரிய குறிப்பு ஒன்று இங்கே நினைவுபடுத்துதற் குரியது.

'ஒருநாள் தென்னாட்டரசன் ஒருவன் குதிரையில் போய்க்கொண்டிருந்தான். அவனுடன் அவன் மருமகனும் சேர்ந்து பிறிதொரு குதிரையில் சென்றுகொண்டிருந்தான். அவன் சென்ற வழியில் பழத்தோட்டங்கள் பல இருந்தன. ஒரு தோட்டத்தில் இருந்த மாமரத்திலிருந்து பழம் ஒன்று தானே விழுந்து சாலையில் கிடந்தது. அதனை அரசன் மருமகன் எடுத்துத் தின்றுவிட்டான். மன்னன் அதனைப் பார்த்து விட்டான். உடனே அரசன் தன்னுடைய ஆட்களை அழைத்து, மருமகனைக் கொன்று அவன் உடலை இரண்டாகக் கிழித்து, சாலையின் இருமருங்கிலும் சிலுவை போன்ற இரண்டு மரக்கட்டைகளை நாட்டச் செய்து அந்தக் கட்டை ஒவ்வொன்றிலும் உடலின் ஒவ்வொரு பகுதியும் மாட்டப்பட்டது.'

இச் செய்தியே யன்றி இன்னொரு செய்தியையும் இபன்பதூதா குறிப்பிடுகிறான்.

'ஒரு சமயம் இந்துக்கள் பலர் சாலையில் சென்றுகொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் ஒரு தேங்காயை உடையவனுக்குத் தெரியாமல் எடுத்துச் சென்றுவிட்டான். அதைக் கேள்விப்பட்ட தலைவன் அவனுக்கு அளித்த தண்டனை கழுவேற்றமாகும்.

மரமுளை ஒன்றைத் தரையில் நட்டு அதன்மீது பலகையைப் பொருத்தினர். மரப்பலகைக்குமேல் மரமுளை கூராக நீட்டிக்கொண்டிருந்தது. பலகையின்மீது தேங்காய் திருடியவனைப் படுக்கவைத்து மரமுளை அவனுடைய வயிற்றில் ஏறி முதுகுப் பக்கம் வரும்படி செய்தனர்.'

இபன்பதூதாவின் இக் குறிப்பு நன்னன் வரலாற்றை நினைவுகூர்வதுடன் தமிழகத்தில் கழுவேற்றம் எவ்வாறு நிகழ்ந்தது என்பதையும் எடுத்துரைக்கின்றது. கழுவேற்றம் என்பது புராண ஆசிரியர் தம் பொய்யுரையன்று—மெய்யுரை என்பதும் தெரிய வருகின்றது.

4. தண்டனை வழங்குதல்:

சிலப்பதிகாரம் கள்வருக்குரிய தண்டனை இறப்பு என்பதையும், கொலைத் தண்டனையைத் தலையை வாளால் வெட்டுவதன்

மூலம் செய்வது என்பதையும் சாற்றுகிறது. புறநானூறு கொலைத் தண்டனைக் குரியாரைக் குறிப்பாகச் சிறுவரை யானைக் கால்களில் இட்டு இடறச் செய்வதை எடுத்துரைக்கிறது. வேறு வேறு நாடுகளில் பலவேறு வகையான தண்டனை முறைகள் இருந்தன. தமிழகத்தில் தலையை வாங்குவதும், யானைக்காலில் இட்டு நசுக்குவதும் தண்டனை முறைகள் என்பதை 'சௌ சுகுவா' (கி. பி. 1225) என்ற சீனப் பயணியின் குறிப்பு உறுதி செய்கின்றது.

5. உடன்கட்டை ஏறுதல்:

கணவர் இறந்துவிடின் மனைவியர் தீ மூட்டியோ அல்லது நீரில் மூழ்கியோ உடன் உயிர் துறப்பர் என்பதைப் புறநானூறும் மணிமேகலையும் எடுத்துரைக்கின்றன. பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு தன் கணவன் இறந்த உடன் தீமூட்டி உயிர் துறந்ததைப் 'பல்சான்றீரே' எனத் தொடங்கும் புறப் பாட்டு புகலுகிறது. பிற்காலச் சோழராட்சியில் இராசராசனின் தாயார் வானவன் மாதேவி இவ்வாறு உடன்கட்டை ஏறி உயிர் துறந்ததைச் சோழர் வரலாறு கல்வெட்டுச் சான்றுடன் உறுதி மொழிகிறது. ஏறத்தாழ இதே காலத்தில் பயணம் செய்து குறிப்பு எழுதிய மார்க்கோபோலோ (கி. பி. 1292) தமிழகத்தில் பெண்டிர் உடன்கட்டை ஏறி உயிர்துறத்தலைக் கண்ணால் கண்டு தம் குறிப்பில் எழுதியுள்ளார்.

6. ஆ காத்தல் :

பசுக்களையும் எருதுகளையும் போர்க்காலத்திலும் ஊனம் வாராமல் காக்க வேண்டும் என்பதைப் புறநானூறும் சிலப்பதி காரமும் எடுத்துரைக்கின்றன. கி. பி. 1292-93 இல் பயணக் குறிப்பு எழுதிய மாண்டிகார்மினோ யோவான் என்பவர் தமிழ் நாட்டு மக்கள் மாட்டு இறைச்சியைத் தின்பதில்லை என்பதையும், மாடுகளைத் தூய விலங்குகளாகத் தொழுகிறார்கள் என்பதையும் சுட்டிக்காட்டுகிறார். கி. பி. 1321 இல் தென்னகம் வந்த ஒடோரிக் துறவி கொல்லம் நகரத்து மக்கள் பசுமாடுகளையும் அவற்றின் சாணத்தையும் தூயதாகக் கருதுகிறார்கள் என்று சுட்டிச் செல்லுகிறார். கி. பி. 1323-30 இந்தியா வந்து பயணக் குறிப்புகள் எழுதிய 'சார்டனகு' துறவியார் மாடுகளை மாந்தரினும் மேலாகக் கருதிப் போற்றினர் என்பதனை எடுத்துரைக்கிறார்.

## 7. நீராட்டல்:

குளிர்நாட்டைச் சேர்ந்த ஐரோப்பியர் நாள்தோறும் நீராடுதல் இல்லை. சமணத் துறவியரும் நீராடுதல் இல்லை. நீராடாது திரியும் சமணத் துறவியரைப் பழித்துப் பேசுவர் சைவக் குரவர். நீராடுதலின் இன்றியமையாமையைத் திருவள்ளுவர்,

> "புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
> வாய்மையால் காணப் படும்"

என்ற திருக்குறள்வழி எடுத்துரைப்பர். கேரள மக்கள் தற்காலத்தும் காலையும் இரவும் நீராடும் பழக்கத்தினர். திராவிடர் நாள்தோறும் நீராடும் பழக்கத்தைப் பார்த்த குளிர் நாட்டுப் பயணியர், நாள்தோறும் நீராடுதலையும், இருமுறை நீராடுதலையும் வியப்பாகக் குறித்துள்ளனர். அரபு ஆசிரியரான 'சுலைமானும்' கிரேக்கப்பயணியான மார்க்கோ போலோவும் தமிழர்தம் நீராடும் மாண்பைச் சிறப்புறக் குறித்துள்ளனர்.

## 8. பூப்பின் புறப்பாடு:

திங்கள்பூப்பு எய்தி, தீட்டு நீங்கியபின் உள்ள பன்னிரண்டு நாள்களிலும் ஆடவர் பெண்டிரை விட்டுப் பிரிதல் இல்லை. இந் நாட்களே கருவுறும் திரு நாட்கள், என்பது அறிவியலார் கணிப்பு. இக் கருத்தைத் தொல்காப்பியர் கற்பியலில்

> 'பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
> நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்'

என்று நுவல்வர். உரையாசிரியர் தீண்டா மூன்று நாட்களையும் தம் உரையில் தெளிவிப்பர். ஆனால், இப் பழக்கம் எல்லா மானிட இனத்திலும் காணப்படுதல் இல்லை. இதனை அராபியப் பயணி சுலைமான் தம் பயணக் குறிப்பில் தெளிவாக எடுத்துக் காட்டுவார்.

> "பெண்டிருக்கு மாதத் தீட்டு வரும்போது இந்தியர் அவரோடு உடலுறவு கொள்ளார். அந் நாட்களில் தாம் தீட்டுப் படாது இருத்தற்காகப் பெண்டிரை வீட்டுக்குப் புறத்தே இருக்கச் செய்வர். சீனரோ எனின் மாத விடாயுள்ள பெண்டிரோடும் உடலுறவு கொள்ளுவர். அவர்களை வீட்டுக்குப் புறத்தே இருக்கச் செய்தலில்லை."

9. நவகண்டம் கொடுத்தல் :

கலிங்கத்துப் பரணி காளியிடம் வேண்டித் தாமே தலை அரிந்து கொடுக்கும் வீரரைக் குறிப்பிடும்.

'அடிக்கழுத்தின் உடன்சிரத்தை அரிவராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்பராலோ'

என்று செயங்கொண்டார் இதனைக் காட்சிப்படுத்துவர். இப் பழக்கத்தை நேரில் கண்டு தம் பயணக் குறிப்பில் எழுதிக் காட்டுவர் மார்க்கோபோலோ (கி. பி. 1292). கி. பி. 1323—30இல் தென்னகம் பயணம் செய்த 'சார்டனசு' துறவி தானே தலையை வெட்டிக் கொடுக்கும் காட்சியை விரிவாக விளக்குவர்.

"தன்னைப் பலி தருவதாக வேண்டிக் கொண்டவன் ஒரு சில ஆண்டுகள் நல்ல சத்துள்ளதும் கொழுப்பு நிறைந்ததும் ஆகிய உணவையும் பானத்தையும் அருந்தி உடலை நன்ருகக் கொழுக்க வைக்கிருன். பின்னர் அடுத்த திருவிழாவின்போது மலரும் மாலைகளையும் அணிந்து கொண்டும் நறுமணப் பொருள்களை உடலில் பூசிக் கொண்டும், ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும் தெய் வத்தின்முன் பாடிக் கொண்டும், ஆடிக் கொண்டும் செல் கிருன். இரண்டு கைப்பிடிகளை உடைய வாளைப் பிடித்துக் கொண்டிருக்கிருன். நெடுநேரம் ஆடியும் பாடியும் மக் களின் கவனத்தை ஈர்க்கிருன். பின்னர்த் தன் கழுத்தின் பின்புறம் வாளைத் தானே வைத்து இரு கைகளாலும் பலமாக அழுத்தித் தன் தலையைத் தானே வெட்டிக் கொள்ளுகிருன்"

இச் செய்தி பயணக் குறிப்பால் மட்டுமன்றிப் பல கல்வெட்டுக் களாலும் சிற்பங்களாலும் தமிழகத்திலும் பிற தென் மாதிலங் களிலும் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றது.

10. பல்துலக்கலும் நாக்கு வழித்தலும் :

"நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி, ஆலும் வேலும் பல்லுக்குறுதி" என்பது தமிழ்ப்பழமொழி. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் கண்ணனுக்கு அவர் தாய் பல்துலக்குவதையும், நாக்கு வழித்தலையும் எடுத்துக் காட்டும். கலிங்கத்துப் பரணி, பேய்கள் பல்துலக்கியதையும் நாக்கு வழித்ததையும் எடுத் துரைக்கும். தமிழர் பல நூறு ஆண்டுகளுக்கு முன் பல்துலக்கக் குச்சியையும் நாக்கு வழிக்க வளைந்த குச்சியையும் பயன்படுத்தி யதை வெளிநாட்டுக்காரர் கண்டு வியந்துள்ளனர். அராபியப் பயணி சுலைமான் எழுதிய குறிப்பு வருமாறு.

'இந்தியர் பல் தேய்ப்பதற்குப் பற்குச்சியைப் பயன் படுத்துகின்றனர்! இந்தியர் அனைவரும் பல்துலக்கியும் குளித்தும் தம்மைத் தூய்மைப் படுத்திக்கொண்டே உணவு உண்பர். ஆனால், சீனர் அவ்வாறு செய்வதில்லை.'

11. கிட்கிந்தை :

இராமாயணத்தில் குரக்கினத்து அரசனாக வாலியும் சுக்கிரீவனும் சொல்லின் செல்வனாக அனுமனும் குறிக்கப்படுகின்றனர். அவர், கிட்கிந்தை என்ற குரங்குகள் வாழும் அரசை 'ஆளுநராக' வருணிக்கப்படுகின்றனர். கறுப்பு நிறமும் நீண்ட மோவாயும் உடையவராய், பேசும் மானிடராய், நெறியற்ற ஆண் பெண் உறவு உடையராய் வருணிக்கப்படும் குரக்கினத்தைப் பற்றியும் அவர் வாழ்ந்த கிட்கிந்தை பற்றியும் கி. பி. 1030 இல் தெற்கே பயணம் செய்த அல்பரூனி தம் பயணக் குறிப்பில் எடுத்துரைக்கிறார். அந்தக் குரங்குகள் தொடக்கத்தில் மக்கள் இனத்தில் ஒரு பிரிவைச் சேர்ந்தவையாக இருந்தன என்றும் அரக்கர்களோடு போர் புரிந்த இராமனுக்குத் துணை நின்றதால் அந்த மக்கள் குரக்கு உருப் பெற்றார்கள் என்று மக்கள் நம்புகின்றனர் என்றும் அல்பரூனி குறிப்பிடுவர். மேலே உள்ள வால்மீகி, கம்ப, இராமாயணக் குறிப்பும் அல்பரூனியின் பயணக் குறிப்பும் இணைத்து எண்ணத் தக்கன. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் தென்னிந்தியாவில் இருந்து சிந்துவெளிக்கு வந்த கறுப்புநிற சுருட்டைமுடி நீக்ரோக்களைப் பார்த்தேன் என்ற ஏரோடேட்டசு குறிப்பும் முகவாய் நீண்டும் கறுப்பு நிறமும் சுருண்ட முடியும் உடைய ஆப்பிரிக்க நீக்ரோவரின் தோற்றமும், கிட்கிந்தையில் வாழ்ந்தவராய்க் குறிக்கப்படும் அனுமான் முதலாய குரக்கின மாந்தரின் தோற்றமும் ஒருசேர வைத்து எண்ணத்தக்கன. இந்தியா, ஆப்பிரிக்கா, ஆத்திரேலியா என்ற மூன்று இடங்களில் மட்டும் கறுப்புநிற மக்கள் வாழ்வதும் இம் மூன்று கண்டங்களும் ஒரு காலத்தில் இணைந்திருந்தன என்று தமிழ்இலக்கியம் காட்டுவதும் இந்தியாவை ஒட்டி அதற்குத் தெற்கே ஆப்பிரிக்காவரை நீண்ட தப்பிரபானே என்ற நெடு நிலத்தைக் கி.மு.வில் பயணம் செய்த பிளினியும் மெகத்தனிசும் சுட்டுவதும் இங்கே ஒன்றாகக் கருதத்தக்கன.

## BASIC WORKS

K. A. Nilakanta Sastri—Foreign Notices of South India 1939

L. A. Krishna Aiyar and L. K. Balaratnam—Ahthropology in India 1961.

# பிரிசியன் மொழி—பிறிதோர் எச்சரிக்கை!

[புலவர். பொ. முனியப்பன்]

'செந்தமிழ்ச் செல்வி'யின் சென்ற மாத இதழில் (சிலம்பு ௫௨, பரல் ௩) திரு. டாக்டர். ந. சஞ்சீவி அவர்கள் 'கார்னிசு மொழி—ஓர் எச்சரிக்கை' என்ற குறிப்புரை ஒன்றை வழங்கியிருந்தார்கள். 'இரு மொழிகளைக் கற்க நேர்ந்த கார்னிசு மக்கள் காலப்போக்கில் தாய்மொழியை மறந்தனர்' என்ற வரலாற்று மெய்ம்மையை எடுத்துரைத்து, இதனைத் தமிழ் மக்கள் எச்சரிக்கையாகக் கொண்டு, மொழி பேணும் பணியில் எங்கும் எவ்விடத்திலும் தளராது முன்னேறிக் கொண்டிருத்தல் வேண்டும் என்பதைக் கூறாமல் கூறினார்கள்.

உலக மொழிகளின் வரலாற்றை நோக்கும்போது, இது போன்று சில மொழிகள் பிற மொழியின் செல்வாக்கால் வாழ்விழந்த வரலாறு நமக்கு நல்ல எச்சரிக்கையாக விளங்குகின்றது. கடந்தகால வரலாற்றில் இத்தகைய மொழி இழப்புகள் நேர்ந்திருக்கலாம். இனி அவ்வாறு நிகழாது—நிகழமுடியாது என்று சிலர் எண்ணலாம்.

ஆயின், ஒரு நாட்டு மக்களிடத்தில் பிறமொழி ஒன்றின் செல்வாக்கு மிகும்போது, இத்தகைய மொழி இழப்புகள் என்றும் நிகழும் என்பதற்குச் சான்றாய் விளங்குவதே பிரிசியன் (Frisian) மொழி. இப் பிரிசியன் மக்கள் இன்று தம் மொழி அழிந்துகொண்டிருக்கிறதே என்று அவலமுறுகிறார்கள். இதைத் தடுக்கப் பிற மொழிச் செல்வாக்கை அறவே தகர்த்தல் வேண்டும் என்பதை உணர்ந்து வருகிறார்கள்.

நமக்கு எச்சரிக்கையாய் விளங்கும் இம் மொழியின் வரலாற்றைச் சிறிது நோக்கி உண்மை உணர்வோம். 'டச்சு நாட்டையும் செர்மனி நாட்டையும் ஒட்டிய கடற்கரைப் பகுதிகளில் வரிசையாகக் கிடக்கும் தீவுகளே பிரிசியன் தீவுகள். இத் தீவுகளின் மேற்பகுதி' டச்சு நாட்டிற்குரியது. கிழக்குப் பகுதி செர்மன் நாட்டிற்குரியது. வடக்குப் பகுதியோ தென்மார்க்கு, செர்மனி ஆகிய இரு நாடுகளுக்கும் உரியது. இத் தீவுகளில் வழங்கும் மொழியே பிரிசியன் மொழி.

ஆங்கிலம் இப் பிரிசியன் மொழியுடன் மிகுந்த தொடர்புடையது என்பர் மொழியியலாளர். இன்று இம் மொழியைப் பேசுவோராக ஏறத்தாழ 3,50,000 மக்கள் உள்ளனர். இவர்களுள் பெரும்பாலோர் 'டச்சுப் பகுதியிலே வாழ்கின்றனர். இம் மொழியுடன்' டச்சு மொழியையும் பேசுகின்றனர்.

அரசியல் பள்ளிப் படிப்பு போன்றவற்றில் பிரிசியன் முதன்மையான மொழியாக ஆக்கப்பட்டிருப்பனும் டச்சு மொழியின் செல்வாக்கினுல் இம் மொழி அழிந்துவருகிறது என்கின்றனர்.*

அறிவியல் உலகமாய் விளங்கும் இந்த நூற்ருண்டிலும் ஒரு மொழி தக்கவண்ணம் பேணப்படவில்லையென்ருல், பிற மொழியின் செல்வாக்கிற்கு உட்பட்டு விடுமானுல் அம் மொழி அழியும் என்பதற்கு இப் பிரிசியன் மொழியைவிடப் பிறிதொரு சான்று தேவையில்லை.

இப் பிரிசியன் மொழி அந் நாட்டின் அரசியல் பள்ளிப் படிப்பு போன்றவற்றில் முதன்மையாக ஆக்கப்பட்ட பின்னும் இந் நிலை தோன்றியது ஏன் என்பதை நாம் ஆழ்ந்து எண்ணிப் பார்த்தல் வேண்டும். அவ்வாறு எண்ணும்போது சில கருத்துக்கள் எழுகின்றன.

இன்றைய உலகிற்கேற்ப ஒரு மொழி அழியாது வாழ வேண்டுமாயின் அஃது அரசியல், பள்ளிப் படிப்பு மொழியாக மட்டும் பயன்பட்டால் போதாது. இற்றை அறிவியல் சூழலுக்கேற்ப அது பல்கலைக் கழகங்களிலும், அறமன்றங்களிலும், மக்களோடு அன்ருடம் தொடர்பு கொள்ளும் மடல்கள், செய்தித்தாள்கள், மற்றுமுள்ள எல்லா வெளியீடுகளிலும் முழுமையாகப் பயன்படுத்தப் பெறுதல் வேண்டும்.

மேலும், நாட்டுக்கு ஒருமொழி, வீட்டுக்கு ஒருமொழி, பாட்டுக்கு ஒருமொழி என்னும் சீர்கெட்ட நிலையை ஒழித்தல் வேண்டும். கல்விக்கு ஒருமொழி, கடவுளுக்கு ஒருமொழி என்னும் இடர்மிகு நிலையைக் களைதல் வேண்டும். யாவரும் பன்மொழியைக் கற்க வேண்டும் எனப் பறை சாற்றுவது நன்மை தாராது என்னும் உண்மையை உணர வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக எந்த ஒரு மொழியும், எக்காலத்திலும் பிறிதொரு மொழியின் செல்வாக்கிற்கு உட்பட்டு விடுமாயின் அஃது அழிவைத் தழுவிக்கொள்ள விரைந்து கொண்டிருக்கிறது என்ற வரலாற்று உண்மையை மறத்தல் கூடாது. பிரிசியன் மொழியின் அழிநிலையை எச்சரிக்கையாகக் கொண்டு ஒவ்வொருவரும் தம் மொழியைப் பேணுவது முதற் கடமையாகும்.

———

* திரு. டாக்டர். ச. அகத்தியலிங்கம் அவர்கள் எழுதிய 'உலக மொழிகள்' (இரண்டாம் பகுதி, பக் : 67).

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

**[ஞா. தேவநேயன்]**

**5. கள்:**

கள்[1] கள்ளுதல்=கலத்தல், பொருந்துதல், கூடுதல்.

கள்—களம்=1. கூட்டம்; அவை. களம்—களன்.

"காலங் களனே காரண மென்று" (நன். 48)

2. கூடுமிடம். ஏர்க்களம், போர்க்களம், அவைக்களம். 3. உடம்பையும் தலையையும் கட்டும் உறுப்பாகிய கழுத்து, தொண்டை. "பாடுகள மகளிரும்" (சிலப். 6 : 157). களம்—வ கல (g). 'கள்' பன்மை யுருபு, பல பொருள்கள் கூடியதை யுணர்த்துவது.

களம்—களர்=1. கூட்டம். 2. கழுத்து. (சூடா.)

கள்—கண்—கணு=பொருத்து, மரக்கணு.

கள்[2] கள்—கள்வன்=1. கரியவன். (பிங்.). 2. யானை. (பிங்.). 3. கருநண்டு. "புள்ளிக் கள்வன்" (ஐங்குறு. 21). நண்டு வடிவான கடகவோரை (திவா.).

கள்—கள=கரிய களாப்பழம். கள—களா. களவு—களவம்.

கள்—களம்=1. கருமை. (திவா.). 2. முகில். "கனைக் களமென" (அரிசமய. பரகா. 44). 3. களா. (சூடா).

களம்—களர்=கருப்பு (சூடா.). களம்—காளம்—வ. கால. காளம்—காளி (கருப்பி)—வ. காலீ.

கள்[3] கள்—கள—கண—கணப்பு=1. குளிர் காயுந் தீ. 2. உடம்புக் காங்கை.

கணத்தல்=1. எரிதல். 2. சுடுதல்.

கள்—காள்—காளம்=சுடுகை, சூடு. காளவனம்=சுடு காடு. காளவாய்=சுண்ணாம்புச் சூளை.

காள்—காய். காய்தல்=எரிதல், ஒளிர்தல், சூடாதல், உலர்தல்.

கள்[4] கள் = முள். கள் — கள்ளி = முட்செடி வகை. ஒ. நோ : முள்—முள்ளி.

கள்—கண்டு = முள், கண்டங் கத்தரி.

கண்டு — கண்டம் = முட்கத்தரி. கள் — கடு = முள்.

கடு—கடி = கூர்மை (திவா.).

கண் எல்லாப் பொருள்களொடும் பார்வையாற் கலப்பதனாலும், கருமையாயிருப்பதனாலும், உடம்பிற்கு விளக்காயிருப்பதனாலும், இரு கடையும் கூர்மையா யிருப்பதனாலும், மேற்கூறிய நாற்பொருளும் அதன் பெயருக்குப் பொருந்துமேனும், ஒருவர் பார்த்தமட்டில் தெளிவாகப் புலனாவது கண்ணின் கருவிழியே யாதலாலும், சில சிற்றுயிர்கட்கும் பறவைகட்கும் கருவிழியே யன்றி வெள்விழியின்மையாலும், கருமைக் கருத்தே கண் என்னுஞ் சொல்லின் பொருட்கரணியமாகும். பெண்களின் கண்ணிற் குவமையாகக் கருங்குவளை மலரைச் சிறப்பாகக் குறித்தலையும் நோக்குக.

கள்—கண் = கருமணி கொண்ட பார்வை யுறுப்பு.

ஒ. நோ: உள்—உண், நள்—நண், பெள்—பெண்.

கண் = 1. விழி. "கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை" (தொல். எழுத். 7). 2. கண்ணோட்டம். 'கண்ணின்று பெயர்ப்பினும்" (தொல். பொ. 130). 3. பீலிக்கண். "ஆயிரங் கண்ணுடையாய்க்கு" (கம்பரா. பம்பை. 27). 4. தேங்காய் பனங்காய்களின் கண். 5. முலைக்கண். 6. புண்ணின் கண். 7. துளை. கால்வாய்த் தலையின் கண்கள் (பாரத. முதற். 72). சல்லடைக்கண், வலைக்கண். 8. தோலிசைக் கருவிகளின் அடிக்கும் பக்கம். "கண் மகிழ்ந்து துடிவிம்ம" (பு. வெ. 2: 8, கொளு). 9. நல்லறிவு (ஞானம்). "கள்ளொற்றிக் கண்சாய்பவர்" (குறள். 927). 10. உணர்த்துவது. "சொன்ன சிவன் கண்ணா" (சி. போ. 5: 2: 1). 11. முன்பு. "கண்ணின் றிரப்பவர்" (குறள். 1056).

ம. கண், கண்ணு = விழி, பீலிக்கண், முலைக்கண், அரும்பு.

க. கண் = விழி, சிறுதுளை, திறப்பு.

து. கண்ணு = விழி, பீலிக்கண், முலைக்கண், பிளவு, கிழிவு.

தெ. கனு, கன்னு=விழி, பீலிக்கண், சிறுதுளை, வலைக் கண், திறப்பு.

துடவம்: கொண் = விழி, கண்ணி (loop).

கோத்தம்: கண் = விழி.

கோலமி: கன் = விழி, சிறுகுழி, குகை.

நாய்க்கி: கன் = விழி, பீலிக்கண்.

பர்சி: கன் = விழி.

கடபா: (ஒல்) கண், (சாலூர்) கனு = விழி.

கோண்டி: கன் = விழி.

கொண்டா: கண் = விழி.

குய்: கனு = விழி.

குவி: கன்னு, கன்னூ = விழி.

குருக்கு: கன்ன (khann) = கிழங்குக் கண்.

மாலத்தோ: கனு = விழி.

பிராகுவி: கன் (khan) = விழி, கரணை, அரும்பு.

கண்—கண்ணு. கண்ணுதல் = அகக் கண்ணாற் காணுதல், கருதுதல். "கண்ணிய துணர்தலும்" (மணி. 2 : 25).

கண்—கணி. கணித்தல் = கண்ணாற் பார்த்தல்.

கடைக்கண்—கடைக்கணி. கடைக்கணித்தல் = 1. கடைக் கண்ணாற் பார்த்தல். "கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக் கடைக்கணித்து" (திவ். பெருமாள் 6 : 3). 2. அருள் நோக்கு நோக்குதல். "கருவெந்து வீழக் கடைக் கணித்து" (திருவாச. 11 : 5).

சிறங்கணித்தல் = 1. கண்ணைச் சுருக்கிப் பார்த்தல். "குவளை மாலைப்போது சிறங்கணிப்பப் போவார்" (சிலப். கானல்வரி, 1 : 7). 2. அவமதித்தல். (W.).

சிறங்கணி—சிறக்கணி. சிறக்கணித்தல் = 1. கண்ணைச் சுருக்கிப் பார்த்தல். "சிறக்கணித்தாள் போல நகும்" (குறள். 1095). 2. கடைக்கண்ணாற் பார்த்தல். (சூடா.).

புறக்கணித்தல் = 1. கவனியாதிருத்தல், பொருட்படுத்தா திருத்தல். "உருகா மனத்தார்களைப் புறக்கணித்திடும்" (தேவா. 612 : 2). 2. அவமதித்தல். "புறக்கணித்திடப்

பட்டிர்க்கும்'' (சீவக. 2376). அளவிடுதலைக் குறிக்கும் கணித்தற் சொல்லும், கண்ணுற் காணுதலைக் குறிக்கும் கணித்தற் சொல்லும், வெவ்வேறென அறிக.

கண்—காண். காணுதல்=(செ. குன்றுவி.). 1. பார்த்தல். ''காணிற் குடிப்பழியாம்'' (நாலடி. 84). 2. தெய்வத்தை அல்லது பெரியோரைக் காண்பு காணல். ''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்'' (திவ். இயற். 3 : 1). 3. கண்டறிதல். ''காணாதாற் காட்டுவான் தான் காணான்'' (குறள். 849). 4. அறிதல். ''யாவருங் கண்ட நெறி'' (ஆசாரக். 17) 5. அறிந்தியற்றுதல். ''முனைவன் கண்டது முதனூலாகும்'' (தொல். பொ. 649). 6. பொறியாலறிதல். ''அவன் பேச்சைக் கண்டு'' (திருவாலவா. 16 : 28) 7. பட்டறிவாலறிதல். 8. ஆராய்தல். ''அறம் பொருள் கண்டார்கணில்'' (குறள். 141). 9. மதித்தல். ''தானெனக் கண்டும்'' (கல்லா. 51 : 7). 10. பெறுதல். ''முற்றுமிடங் கண்டபின்'' (குறள். 491). 11. ஒத்திருத்தல். ''மழை காணு மணிநிறத்தோய்'' (கம்பரா. குகப். 26).

(செ. கு. வி.). 1. நிகராதல். என்ன இருந்தாலும் அவருக்குக் காணுமா? 2. பொருந்துதல். ''மற்காணுந் திரடிண்டோள்'' (கம்பரா. குகப். 26). 3. கண்ணிற்குத் தெரிதல். ''காண்கின்ற நிலமெல்லாம் யானே யென்னும்'' (திவ். திருவாய். 5 : 6 : 3). 4. சேர்தல். இவ்வாண்டு சாகுபடி எவ்வளவு காணும்? 5. போதியதாதல். இவ் வரிசி எத்தனை நாளைக்குக் காணும்?

காண்=(பெ.) 1. காட்சி. ''காண்பிறந் தமைந்த காதல்'' (கம்பரா. திருவடி தொழு. 80). 2. அழகு. ''காண்டக முந்துநீ கண்டுழி முகனமர்ந்து'' (திருமுரு. 250-1).

(இடை.) முன்னிலை யுரையசை. ''துவ்வாய் காண்'' (குறள். 1294).

காண்கை=அறிவு. ''பொய்யா மாக்கள் தொழுது காண்கையர்'' (முல்லைப். 56).

காட்சி=அறிவு. ''மருடீர்ந்த மாசறு காட்சி'' (குறள். 199). காண்—காணம்.

கண் காணம்=மேற்பார்வை, அறுவடை மேற்பார்வை, ஒப்படி மேற்பார்வைச் சம்பளம்.

கண்காணி=1. மேற்பார்வலன். 2. ஒப்படியலுவலர். 3. கூலியாட்களை மேற்பார்ப்பவன். 4. காப்பி தேயிலைத் தோட்டங்கட்குக் கூலியாட்களைச் சேர்ப்பவன்.

கண்காணியார்=கிறித்தவ சபையை மேற்பார்க்குங் குரவர்.

கண் காணித்தல்=1. மேற்பார்த்தல். 2. மேற்பார்த்துப் பாதுகாத்தல்.

கண்காணிப்பு=மேற்பார்வை. கண் காணிப்பாளர்=மேற் பார்க்கும் அதிகாரி. கண்காணிக்கை=கண்காணிப்பு.

காணி—காணிக்கை=தெய்வத்திற்கும் திருவடியார்க்கும் படைக்கும் பொருள். "வேதாளநாதன் மகிழுங் காணிக்கை யாகி" (சேதுபு. வேதாள. 34).

ம. காணிக்க, க., து. காணிகெ, தெ. கானுக.

காண் என்னுஞ் சொல் ஆங்கிலத்திலும் அதன் இன மொழிகளிலும் கன் (cun), கான் (con), கென் (ken) கெஅன் (can) என்று திரிந்துள்ளது. கீன் (keen) என்று திரிந்துள்ள தாகவும் கீற்று (Skeat) கூற்றினின்று தெரிகின்றது.

காணுதல் என்னுஞ் சொல், தமிழில், புறக்கண்ணாற் காணு தலையும் அகக் கண்ணாற் காணுதலையும், குறிக்கும். முன்னது பார்த்தல்; பின்னது அறிதல். தியூத்தானிய மொழிகளிற் காண் என்பதன் திரிசொற்களெல்லாம் பின்னதையே உணர்த்து கின்றன.

*Cun*: *AS*. *cunnan*, to know, *ME*. *cunnen*, to know, *ON*. *cunna*, to know, *Ice*. *kunna*, to know, *Sw*. *kunna*, to know, *Dan*. *kunde*, to know, *M Goth*. *kunnan*, to know.

செய்வான் (செய்ய) என்னும் எதிர்கால வினையெச்சத்தின் (முற்றெச்சத்தின்) 'வான்' ஈறு மலையாளத்தில் 'ஆன்' ஈருகத் திரியும். அதுவே 'அன்' என்று குறுகியும் பின்னர் 'என்' என்று திரிந்தும் பழைய ஆங்கிலத்தில் நிகழ்கால வினையெச்ச (Infinitive) ஈருக வழங்கினதாகத் தெரிகின்றது. ஆங்கில இன மொழிகளில் அவ்விரண்டும் 'அ', 'எ' எனக் கடைக்குறைந் துள்ளன.

E *cunning*, 1. Kowing, skilful, *ME cunning*, *conning*, Northern form *cunnand*, Ice. *kunnandi*.

2. Knowledge. knowledge, skill. *ME conninge*, *Ice*. *cunnandi*, *AS cunnung*, temptation, trial.

*E*. *con*, A secondary verb, formed from *AS cunnan*, to know; it signifies accordingly 'to try to know' and may be regarded as the desiderative of 'to know'—Skeal's. Etymological Dictionary of the English Langauge, p. 126. *con*, 1. to learn, learn to know, study. 2. to commit

to memory.—The Random House Dictionary, p. 303. To con (the passage) (Shakespeare) = to learn by heart.

*E. ken*, to know. Every man kens (knows) best where his own shoe pinches, (prov). *ME kennen*, to make known, see, know, discern. *OE cennen* to make known, declare, *Ice. kenna*, to know, *Sw. kanna*, *Dan. kjende*, *Du. kennen*, *G. kennen.*

E. *can*, to know, to know how to, to be able.

*G., Ice., Goth. kann.*

Cf. *AS cunnan*, to know, to know how to do, to be able.

*Ice. kunna*, to know, to be able.

*Sw.* kunna " "

*Dan. kunde* " "

முதற்கண், 'கான்' (con, kon) என்னும் தியூத்தானியச் சொல் முதலெழுத்துயிர் முன் பின்னாக முறைமாறி 'க்ன' (cnā, knā) என்றும் 'க்னோ' என்றும் திரிந்தது.

*AS cnāwan*, *Ice. knā*, *ON kna*, *ME knowen*, *E. know*, *OHG chnaan*, *cnahan.*

ககரம் சில மொழிகளில் 'ga' என்னும் எடுப்பொலியாக (voiced sound) மாறுகின்றது.

*L gna*; *gnarus*, knowing, having knowledge of, acquainted with; *OIrish gnāth*, known, accustomed, *W. gnawd*, a custom.

கிரேக்கத்தில் இவ் வெடுப்பொலிக் ககரம் (ga) இரட்டிக்கின்றது.

*Gk gignnōskō.*

சமற்கிருதத்தில் எடுப்பொலிக் ககரம் (ga) ஜகரமாகத் திரிகின்றது. *Skt.* jñā (ஜ்ஞா). g—j, ந—ஞ, போலித்திரிபு.

வ. ஜ்ஞான—இந். ஜான்.

ஜகரம் சில மொழிகளில் ஸகர எடுப்பொலியாக (za) மெலிந்து விடுகின்றது.

*Russ. znate*, to know; *Pers.* far-zān, knowledge.

இவ் வெல்லாத் திரிபுகட்கும் மூல வேர் GEN (கென்) எனக் குறிக்கின்றார் கீற்று (Skeat).

மேலையர் இன்னும் மொழிகளைச் சரியாய் ஆராயவில்லை. இற்றை அறிவியல்களெல்லாம் மேலையர் கண்டவையே. ஆயின், மொழிகள் வரலாற்றிற்கு முந்திய பண்டைக் காலத்தன வாதலால், அவர்களின் ஆராய்ச்சிக் குட்பட்ட தன்று. பொறிக் கருவிகள் எத்துணைச் சிறந்தனவாயினும் மாந்தன் கையாளாவிடின் இயங்கா; இயக்கிய பின்பும் இறுதிவரை மாந்தன் உடனிருத்தல் வேண்டும். துலையுங் கணிப்பானும் கெட்டிருப்பின் தவறான நிறையுங் கணக்குங் காட்டும். தவறான வழியைக் கையாளின் எவ் வினையும் வெற்றியாய் முடியாது.

கால்டுவெல் தமிழ்நாட்டின் இருண்ட காலத்தில் வந்ததனால், தமிழர் வெளி நாட்டினின்று வந்தேறிகள் என்றும், திரவிட மொழி சித்தியத்திற்கு இனமென்றும், தவறாக முடிபு செய்துவிட்டார். இந்தைரோப்பிய மொழிகளின் அடிப்படை தமிழே. அவற்றின் கொடுமுடியே சமற்கிருதம். ஆகவே, ஐரோப்பிய மொழியமைப்பின் அல்லது வரலாற்றின் திறவுகோல் தமிழிலேயே ஆழப்புதைந்து கிடக்கின்றது. இதைக் கண்டுபிடிக்கும்வரை, மேலையர் மொழியாராய்ச்சி யெல்லாம் விழலுக்கு நீரிறைத்தலும் வானத்து மீனுக்கு வன்றூண்டி விடுதலுமேயாகும்.

தமிழரின் முன்னோர் மாந்தன் பிறந்தகமாகிய குமரி நாட்டில் தோன்றியவர். தமிழ் வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்தது. திரவிடம் வடமேற்கிற் சென்று ஆரியமாக மாறிற்று. அவ் வாரியம் ஐரோப்பாவின் வடமேற் கோடியை முட்டித் தென்கிழக்காகத் திரும்பி இந்தியா என்னும் நாவலந்தேயம் வந்து சேர்ந்தது.

ஆதலால், பல அடிப்படைத் தமிழ்ச் சொற்கள் தியூத்தானியத்தில் தமிழுக்கு நெருங்கியும், இலத்தீனில் சற்றுத் திரிந்தும், கிரேக்கத்தில் அதினும் மிகத் திரிந்தும், வேதமொழியிலும் சமற்கிருதத்திலும் மிகமிகத் திரிந்தும், உள்ளன.

எ—டு:

| தமிழ் | ஆங்கிலம் | இலத்தீன கிரேக்கம் | வேதமொழி அல்லது சமற்கிருதம் |
|---|---|---|---|
| அகரம் | OSax. akkar | | |
| (மருத நிலம், | ME. aker | L. ager | |
| மருதநிலத்தூர்) | E. acker | Gk. agros | ajras (field) |
| உகை—அகை | | G. ago | aj (to drive) |
| (செலுத்து) | | | |

| | | | |
|---|---|---|---|
| கும் (கூடு) | | L. cum | |
| | | Gk. sum | sam |
| மன் | man | — | manu |
| முழுகு | | L. mergo | majj |
| வலி (வலம்) | — | L. valeo | bala |

வல்லின மெய்யெழுத்துக்களுள், எடுப்பிலா (voiceless) வொலிகளே எடுப்பொலிகளினும் முந்தியவை. தமிழில் தனி அல்லது இயற்கை யெடுப்பொலிகள் இல்லை. மெல்லின மெய் யொடு கூடிய செயற்கை யெடுப்பொலிகளே யுள. தமிழ் எடுப் பிலா வொலிகள் திரவிடத்திலேயே எடுப்பொலிகளாகத் திரிந்து விடுகின்றன.

எ—டு :

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| குடி (வீடு, கோயில்) | gudi |
| கும்பு (கூடு) | gumpu |

ஆதலால், ஆரியத் திரிபைப் பற்றிச் சொல்ல வேண்டிய தில்லை.

காண் என்பதன் திரிசொற்கள், இலத்தீன கிரேக்கத்தில் எடுப்பொலியொடும் தியூத்தானியத்தில் எடுப்பிலா வொலி யொடும் இருத்தல், முன்னவற்றினும் பின்னவை தமிழுக்கு நெருக்கமா யிருத்தலை யுணர்த்துதல் காண்க.

கால்டுவெலர், தொல்காப்பியமும் பத்துப்பாட்டு எட்டுத் தொகைகளும் தமிழர்க்கும் தெரியாது மறைந்து கிடந்த காலத் தில், வழிகாட்டியுமின்றித் தன்னந் தனிமையாய் ஆராய்ந்த போதும், தமிழின் தொன்மை முன்மைகளையும் மூலத் தன்மை யையும் உணர்ந்து, தம் திரவிட ஒப்பியலிலக்கண நூலின் இறுதியில், சொல்லியல் உறவுகள் (Glossarial Affinities) என்னும் பகுதியில், கீழ் வருமாறு வரைந்துள்ளார்.

"*kaṇ*, the eye; kāṇ (in the preterite *kaṇḍu*), to see; also secondarily, to mark, to consider, to think. In the latter sense it comes *kaṇṇu* in Tamil, but the base remains unchanged. In (*kanu*, *kannu*) Telugu, the ordinary *n*, the nasal of the dental row, is used instead of *ṇ*, the cerebral nasal. Comp. the Welsh *ceniaw*, to see; English *ken*, view, power of reach of vision, to ken, to know by sight. In Webster's "English-Dictionary" *kanna* was said to be 'an

eye' in Sanskrit; whereas it is exclusively a Dravidian word. This error may be compared with Klaproth's representing *kuruta*, blind, as a Sanskrit word, instead of referring it to the Dravidian languages, to which alone it belongs. There is a curious word in Sanskrit *kāṇa*, one-eyed, which seems to have some Dravidian relationship. It becomes in Bengali *kāṇā*, blind which, in form at least, is identical with the Dravidian negative *kāṇā*, that sees not. Possibly the Dravidian *kāṇ*, to see, *kaṇṇu*, to consider, may have some ulterior connection with the Gothic *kunn-an*, to know; Greek *gnō-nai*; Sans. ña; Latin *gna* (*gnarus*); Old High German *chann*. The different shades of meaning which are attributed to Greek to *gnō-nai* and *eide-nai*; seem to corroborate this supposition; for the latter is represented as meaning to know by reflection, to know absolutely, whereas the former means to perceive, to mark, and may therefore have an ulterior connection with the Dravidian root."

—Caldwell's Dravidian Comparative Grammar, University Edition, p. 591.

தமிழ் வளர்ச்சி தடுக்கப்பட்டிருந்த கடந்த மூவாயிரமாண்டுக் காலத்தில், ஆரியப் பூசாரிகளான வடமொழியாளர், ஜ்ஞா என்னுந் திரி சொல்லினின்று பின்வருமாறு ஏராளமான சொற்களை ஆக்கிக் கொண்டனர்.

(1) முன்னொட்டுப் பெருதவை.

ஜ்ஞாத்வ, ஜ்ஞாப்தி, ஜ்ஞாதி, ஜ்ஞாத்ரு, ஜ்ஞாதேய, ஜ்ஞாதர, ஜ்ஞாந, ஜ்ஞாநி, ஜ்ஞாபக, ஜ்ஞேய முதலியன.

(2) முன்னொட்டுப் பெற்றவை.

அஜ்ஞா, அஜ்ஞாதி, அஜ்ஞாந, அஜ்ஞாநி, அஜ்ஞேய, அநுஜ்ஞப்தி, அனுஜ்ஞா, அநுஜ்ஞாந, அநுஜ்ஞாபக அநுஜ்ஞாபந, ஆஜ்ஞா, ஆஜ்ஞப்தி, ஆஜ்ஞாத்ரு, ஆஜ்ஞாபந, ப்ரஜ்ஞா, ப்ரஜ்ஞ, ப்ரஜ்ஞாத்ரு, ப்ரஜ்ஞாந, ப்ரஜ்ஞாபந, ப்ரதிஜ்ஞா, ப்ரதிஜ்ஞாந, பரதிஜ்ஞேய, விஜ்ஞா, விஜ்ஞாந, விஜ்ஞாநி, விஜ்ஞாபக, விஜ்ஞாபந, விஜ்ஞாப்தி, விஜ்ஞேய, ஸம்ஜ்ஞா, ஸம்ஜ்ஞாபந, ஸம்ஜ்ஞாந, ஸம்ஜ்ஞாநி முதலியன.

இவை ஒரு பருக்கை அல்லது ஓரிசிப் பதம். இவற்றினின்று ஏனைச் சொற்பெருக்கத்தையும் உய்த்துணர்ந்து கொள்க. இங்ஙனம் வடமொழியை வளர்த்துக் கொள்ளுதற்கு

ஊணுடை முதலிய வாழ்க்கைப் பொருள்களெல்லாம் வரையாது வழங்கிய வள்ளல்கள், மேலையாரியத் திரிபாகிய வேதமொழி யையும் அதனோடு தமிழைச் சேர்த்து வளர்த்த சமற்கிருதத் தையும் தேவமொழியென்றும், அதனைப் போற்றுவதால் மண் ணுலகமே வீட்டுலகமாய் மாறிவிடுமென்றும், குருட்டுத்தனமாய் நம்பிய பேதை மூவேந்தரே.

தமிழகத்திற்கு வேதமொழியோ சமற்கிருதமோ எள் ளளவுந் தேவையில்லை. ஆயினும் சமற்கிருதத்தை வளர்த்தது, தமிழை வீழ்த்தற்கும் நாளடைவில் அதனை ஒழித்தற்குமே என் பதை அறிதல் வேண்டும். தமிழகம் சிவ மதமும் திருமால் மதமும் தோன்றிய நாடாயிருந்தும், இன்றும் திருக்கோயில் வழிபாடு வடமொழியிலேயே நடைபெறல் வேண்டுமென் றிருப்பது, தமிழரின் மடமையையும் அடிமைத் தனத்தையுமே வலியுறுத்திக் காட்டும்.

காணம் அல்லது காட்சி யென்னும் மூலச்சொல் சிறவாது, ஞானம் என்னும் அதன் திரிசொல்லே சிறந்து தோன்றுவது, உண்மையான ஒளிக்கல்லினும் போலிக்கல்லே பொலிந்து தோன்றுவது போலும்! எனினும், சமற்கிருதத்திற்கு ஞானத் தைத் தந்தது தமிழே என்னும் புகழ் நிலைத்து நிற்கும்.

———

தமிழின் தலைமையை நாட்டும் சொற்கள், தனிச் சொற்கள் என்றும், இணைச் சொற்கள் என்றும், தொகுதிச் சொற்கள் என்றும் முத்திறத்தன. இன்று வெளிவருபவை தனிச்சொற் கட்டுரைகள். இத் தொடர் 40 கட்டுரைகளைக் கொண்டது. இணைச் சொர்கள் மெல்—வல், அம்மை—அப்பன் போல்வன. தொகுதிச் சொற்கள் ஆ (அ)— ஈ (இ)—ஊ (உ) ஆகிய முச் சுட்டுச் சொற்கள் போல்வன. இணைச்சொற் கட்டுரை 5; தொகுதிச்சொற் கட்டுரை 5.

இவற்றுள், முச்சுட்டுச் சொற்கள் தமிழின் தலைமையை அறுதியும் இறுதியும் உறுதியுமாக ஐயந்திரிபற நாட்டும். இவை உயிர்முதற் சொற்களாயினும், தொகுதிச் சொற்கள் என்னும் வகுப்பைச் சேர்ந்தன வாதலால், சென்ற 'அரத்தம்' என்னும் உயிர்முதற் சொல்லின் பின் இடம் பெறவில்லை.

இன்று வெளிவருவது, தனிச்சொற் கட்டுரைத் தொடரில் உயிர்மெய்ம் முதற் சொற்களுள் முதலது என அறிக.

# வேட்டுவவரி தீட்டும் குறிப்புரை

[புலவர் துரை எழிலன்]

சிலப்பதிகாரத்தில் கானல்வரி கருவூலமாகத் திகழ்வது போல வேட்டுவ வரியும் ஓர் இன்றியமையாக் காதையாக விளங்குகிறது. நானிலப் பகுப்புமுறைகளை விளக்கிக்கொண்டு வருகின்ற இளங்கோவடிகள் ஐந்தாவது நிலமாகிய பாலைத் திணை இயல்பையும் அங்கே வாழ்க்கை நடத்துகின்ற வேட்டுவர்கள் இயல்பையும் குறிக்கின்றார் என்பதையே பொதுவாக அறிவோம். ஆயின் ஆழ்ந்து சிந்திக்கச் சிந்திக்கத் தொட்டனைத் தூறும் மணற்கேணி போலப் பல அரிய கருத்துக்களை அப் பகுதி விளக்குவதாயுள்ளது. வேட்டுவவரிக்குப் பின்னால் அடைக்கலக் காதை, கொலைக்களக் காதை முதலியன வருகின்றன. அவற்றிற்கு முன் கோவலன் கண்ணகியின் எதிர்கால வாழ்க்கையின் முடிவு எப்படிப்பட்டதாக இருக்கப்போகிறது என்பதைச் செவ்வனிறைமூலம் கூருது குறிப்பாகப் புலப்படுத்துகின்றார் என்பது பொருந்தும்.

**குமரிக்கோலம் :**

"இட்டுத்தலை யென்னும் எயின ரல்லது
சுட்டுத்தலை போகா தொல்குடிக் குமரியை
சிறுவெள் ளரவின் குருளைநாண் சுற்றிக்
குறுநெறிக் கூந்த னெடுமுடி கட்டி"

எனவரும் வேட்டுவவரி (20-45) வரையுள்ள கருத்தை நோக்கும் போது வேடர்கள் தங்கள் குலதெய்வமாகிய கொற்றவைக்கு வழிபாடு செய்ய இவ்வாறு ஒரு பெண்ணைக் கொற்றவைபோல அலங்கரித்து வழிபடுகின்றனர் என்று வெளிப்படையாக அறிவுறுத்தும் அடிகளார் பின்னாலே கண்ணகி கொற்றவைத் தெய்வமாக மக்களிடையே பரவப் பெறப்போகிருள் என்ற குறிப்பையும் பெய்து செல்கிருர்.

**சாலினியின் பாத்திரப் படைப்பு :**

இளங்கோவடிகள் எந்தப் பாத்திரத்தைப் படைத்தாலும் அதன்மூலம் மனித சமுதாய நலன் பொருட்டுப் பல நல்ல கருத்துக்களைக் கூறிக் கதைப்போக்கிற்கு அவ்வப்பாத்திரங்கள் செவ்விதின் மிளிரும் வண்ணமாகப் படைத்துள்ளார். மாடலனைப் படைத்தபொழுது அவன்மூலம் கோவலனின் சிறப்பு இயல்புகளையும் அவன் உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகம் செய்யும் செம்மலென்பதையும் விளக்கிக் காட்டினர். கோவலன் கண்ணகியோடு செல்லும் கவுந்தியடிகள் வாயிலாகப் பல சமணசமயக் கருத்துக்களைக் கூறுகின்றார். மாங்காட்டு மறையோனைப் படைத்ததன் வழியாக வைணவக் கருத்தைச் சொல்கிருர்.

இங்கே தெய்வமேறப்பெற்ற முழங்குவாய்ச் சாலினி கோவலன் கண்ணகியர் அருகில் வந்து நான்கு நிலைகளைக் கூறுகிறாள். இந்த நான்கு நிலைகளும் கண்ணகி வாழ்வில் பின்னால் நிகழ்கின்றன.

"இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய
திருமா மணி"

என்கிறாள். இந்த வரிகளை நாம் வெறும் குறியாக் கட்டுரையாக, வெற்றுப் புகழுரையாக மட்டும், கொள்ளக் கூடாது. பின்னாளில் கண்ணகி (1) கொங்கு நாட்டுத் தெய்வமாகத் திகழப்போகிறாள். (2) மேற்குமலையெனும் சேரநாட்டுத் தெய்வக் கொழுந்தாய்ப் பசிப்பிணி நீக்கும் பண்புடைப் பெண் தெய்வமாய் மக்களாலே பரவப்பெறப் போகிறாள். (3) "வடவேங்கடம் தென்குமரி' ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகில் பிறந்த தமிழ்ப்பாவையாகிய இவள் கற்புடைத் தெய்வங்களே தொழத்தக்க தலையாய கற்புத் தெய்வமாகப் போகிறாள். 4. உலகத்திலே ஒரு மாமணியாகவும் அவளே திருமாமணியாகவும் நிறைகாக்கும் கற்பாலே பத்தினி வழிபாட்டைத் தோற்றுவிக்கப் போகிறவள் இவளே என்றும் பொருள் கொள்ளல் பொருத்தமுடையது. ஏனெனில் இந்நான்கு கூறுகளும் அவள் வாழ்க்கையில் நிகழ்கின்றன. பத்தினி வழிபாட்டு முறையை விளக்குவதே இளங்கோவடிகளின் நோக்கமாகும். மேற்கண்டவாறு சாலினி கூறும்போது "விருந்தின் மூரல் அரும்பினள் நிற்ப" என்கிறாள். நீண்டநாளாக நகைக்காத கண்ணகி புதிய புன்முறுவல் பூக்கின்றாள். அவள் முறுவல் பின்னாலே பேரழுகையாக மாறுகிறது. கணவனை இழந்த நிலையிலே வெடிச் சிரிப்பாகவும் வேதனைக் குமுறலாகவும் மாறுகிறது; மதுரை அழிகிறது. அரச நீதி அடியோடு சாய்வதைக் காண்கின்றோம்.

சிலம்பின் வினை (அல்லது) சிலப்பின் செயல் :

'சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி'—இவ் வரிக்கு உரையாசிரியர்கள் இடப்பக்கத்தில் சிலம்பும் வலப்பக்கத்தில் வீரக் கழலும் அணிந்துள்ள கொற்றவைக்குமரி என்று கூறுகின்றனர். குமரிக்குக் கூறும் கூற்றெல்லாம் கண்ணகிக்கும் பொருந்துகிறது.

கண்ணகி காற்சிலம்பு கழல்கிறது. அஃது எதற்குக் கழல்கிறது. கோவலன் தொலைத்த குன்றன்ன செல்வத்தை மீண்டும் பெறக் கோவலனிடம் சிலம்பினைக் கொடுக்கின்றாள். அதனால் ஊழ்வினை வந்துறுத்த எதிர்பாரா வகையிலே கோவலன் கொலையுறுகிறான். அப்போது சிலம்பு கழன்ற

வினையாலே அவள் சீறடி புலம்புகிறது. புலம்புதல் என்பதற்கு ஒலித்தல் என்பது இவ்விடத்திற்குப் பொருளாக இருந்தாலும் பின் நிகழ்வை எண்ணுங்கால், வழக்குலகில் புலம்பல் என்ற தொடர் மிகுதியான துன்பத்தைக் குறிக்கவரும் அமங்கலச் சொல்லாகும். "புலம்பே தனிமை" என்பது தொல்-பொருள். சிலர் சீறடி என்ன புலம்புகிறது என்று வினவலாம். பிறிதோர் இடத்தில் 'நின்றிலள் நின்ற சிலம்பொன்று கையேந்தி' என்று வருகிறது. அங்கே 'மண்மகள் அறியா வண்ணச் சீறடி' உடைய கண்ணகி கோவலன் கொலையைக் கேட்ட மாத்தி ரத்திலே காடு மேடென்றும் பாராது, புலம்பி ஓடப்போகிறது. இதனைக் குறிக்கவே 'சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி' என்று குறித்துள்ளதாகக் கொள்ளல் நயம்பயப்பதாகும்.

வருமுன் காப்பு :

"வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாகி நடுக்கின்றியே நிற்பாய்"

என்று சாலினி கொற்றவைக் கோலக் குமரியைப் பார்த்துக் கூறினும் அவ் வரிகள் கண்ணகிக்குரியனவே. 'ஞானக் கொழுந்தாகி நிற்பாய்" என்ற அளவிலமையாது நடுக்கின்றியே என்ற சொல்லையும் அடிகளார் இணைத்ததைச் சிந்தித்துப் பார்ப்போம். வாழ்த்துவதாக அச்சொல்லைக் கொண்டாலும் பொருள் பொருந்துவதே. ஆனால், அதற்கு மேலும் எண்ணிப் பார்க்கும்போது மங்கல வாழ்த்துப் பாடலில், "காதலர் பிரியாமற் கவவுக்கை நெகிழாது" என்று மாதரார் வாழ்த்துவது திருமண மான சில நாட்களில் கண்ணகியைக் கோவலன் பிரிகிறான் என் பதையும் குறிப்பாகச் சுட்டுகிறது. இருவர் கையும் ஒன்றி இருத்தல்போல வாழ்க்கை இருக்கவேண்டும் என்று வாழ்த் தினர். ஆனால், நிகழ்வதோ காதலர் பிரிகின்றனர்; கவவுக்கை நெகிழ்கின்றது. அதுபோல கண்ணகியே! நீ நடுங்கித் துயரெய்தப் போகிறாய் என்றே எதிராகப் பொருள் கொள்ளல் வேண்டும். சாலினி கண்ணகிக்குப் பின்நிகழ்வை முன்கூட்டியே எச்சரிக்கிறாள் என்பதே பொருத்தமுடையது.

காப்பியத் தலைவன் நிலை :

"சுடரொடு திரிதரு முனிவரு மமரரும்
இடர்கெட வருளுநின் னிணையடி தொழுதேம்
அடல்வலி யெயினர்நின் னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறறரு விலையே"

எனவரும் அவிப்பலி 18, 19, 20 பலிக்கொடை முதலிய செய் யுட்களை நோக்குங்கால் வேடர்களின் வீர வழிபாட்டு முறையைக் கூறினும் பின்னால் கோவலன் பலியுண்ணப் போகிறான்; அவன் உடல் முழுவதும் குருதி மயமாக ஆகப்போகிறது என் பதைக் குறிக்கவே அடிகளார் எயினர்கள் நிலையிலே வைத்துக்

காப்பியத்தலைவன் கொலையுறப் போகும் அவலச் சுவையின் நிலையினைக் கூறுவதாகவே அவிப்பலி பலிக்கொடைக் காட்சியைக் கொள்ளல் வேண்டும். அடைக்கலக் காதையின் இறுதிப் பகுதியில்கூட மதிற்பொறிகளின் காட்சியின் வருணனை இருபொருள்படுவதாகவே அமைந்துள்ளது. மதுரைக் கோட்டையில் பலவகைக் கொலைக் கருவிகள் காணப்படுகின்றன. இடையர்கள் கோடாரியும் கம்பும் இன்னபிற ஆயுதங்களையும் எடுத்து வருகின்றனர். மாலைப் பொழுது மங்கிவிட்டது. இன்னும் தன் கணவனைக் காணவில்லையே எனக் கோவலன் கொலையுறப் போகும் முதல் நாள் மாலையிலேயே இக்காட்சிகளைக் காணுவது இவ்வகை ஆயுதங்கள் அவன் உயிரைக் குடிக்கப் போகின்றன என்பதைச் சுட்டவே யாகும்.

மேலும் இங்கே என்ன ஒற்றுமை என்றால் எந்த வேடுவர் இனத்தால் ''இவளோ கொங்கச் செல்வி'' என்று பாராட்டப் பட்டதைக் கேட்டதும் கண்ணகி புன்முறுவல் பூத்தாளோ, அந்த முறுவல் முறுக்கான பேரிடியாகிக் கணவனையிழந்து திருச்செங்குன்றக் காட்டுப் பகுதியில் புலம்பி நிற்கும்போது வானத்திலிருந்து விமானம் ஒன்று வந்து அவளை ஏற்றிச் சென்றதை வேடர்கள் கண்ணாரக் கண்டதைக் கானகத்திற்குஉலா வந்திருந்த மன்னர் செங்குட்டுவன், அவன் மனைவி வேண்மாள், சாத்தனார், இளங்கோ இவர்கள் வீற்றிருக்கும்போது வேடர்கள் கூறி வியந்ததையும் சாத்தனார் பின் கோவலன் கண்ணகி கதையைக் கூற இளங்கோ அடிகள் எழுதினாரென்பதை வரலாறு வடித்துக் கூறுகிறது. எந்த வேடுவர்களால் கண்ணகி தெய்வமாகப் போகிறாள் என்று கூறப்பட்டாளோ அவர்கள் முன்பாகவே தெய்வமாகி விட்டாள். அன்றிலிருந்து இன்றுவரை கண்ணகி தெய்வமாக விளங்குகிறாள். இத்தகு பல ஒற்றுமைச் சான்றுகளைப் பார்க்குங்கால் வேட்டுவவரிப் பாடல்களின் சொற்கள் ஒவ்வொன்றும் ஓர் உள்ளாழத்தோடு வருமுன் இன்னது நடக்கப்போகிறது என்பதைப் புலப்படுத்துவதாயுள்ளது. வேட்டுவர்கள் வாயிலாக அதனைக் கண்ணகி, கோவலனுக்கு இளங்கோ எச்சரிக்கிறார் எனினும் ஊழே அவர்கள் வாழ்வில் ஊடுருவி வெல்கிறது. 'ஊழிற் பெருவலி யாவுள...?'

மேலும் ஒரு காப்பியத் தலைவன் எதிர்பாராது கொலையுண்டான். தலைவி ஆற்றொணாத் துயரெய்தினாள் என்று இளங்கோவடிகள் கூறியிருப்பாரேயானால் நம் மனம் உருகும். அதற்கு வேண்டிய அடிப்படை இப்படித்தான் நடக்கப்போகிறது என்பதை முதலில் கூறி நம் மனத்திற்கு அமைதியூட்டும் வகையில் அமைத்துள்ளார். இரு பொருட்டொடர்களை இளங்கோ அமைத்த திறம் எண்ணியெண்ணி வியக்கத்தக்கது.

———

# பழந்தமிழில் மக்கட் பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

பழந்தமிழ் மக்களின் பெயர்கள் அழகியவை. அவற்றின் பொருள் நுடபங்களை ஆயும்போது பழந்தமிழ் மக்களின் மன வளம் தெற்றெனப் புலப்படுகின்றது. கடைக் கழகக் காலத்திலும் அதற்கு முன்னும் வாழ்ந்த தமிழ்மக்களின் பெயர்களை ஆய்வதற்கு ஏனைத் திரவிட மொழிகள் பெரிதும் பயன் படுகின்றன. பண்டைத் தமிழிலக்கியங்களின் உதவி கொண்டும் திரவிட மொழிகளில் காக்கப்பட்டு வரும் பழந்தமிழ்ச் சொல் வடிவங்களைக் கொண்டும் கடைக்கழகப் புலவர்கள், அரசர்கள், பொதுமக்கள் ஆகியோரின் பெயர்க் கரணியங்களை நிரலே அகர வரிசையில் ஆய்ந்துள்ளேன். இவையே முடிந்த முடிபாகாவெனினும் முடிந்த முடிபு நோக்கிக் கற்பாரை ஈர்க்கும் எனலாம்.

1. அஃதை:

சோழன் மகளொருத்தி 'அஃதை' என்னும் பெயரோடு விளங்கினாள். இன்றும் துளுமொழியினர் 'அக்கு' என்னும் பெயரை மகளிருக்கு இயற்பெயராக இடுகின்றனர்.

அஃகு என்னுஞ் சொல்லுக்குச் சிறிதாதல், தகுதியுடையதாதல் முதலிய பொருள்கள் உள்ளன. தகுதி வாய்ந்த பெருமாட்டி என்னும் பொருள்படச் சோழ மன்னன் தன் மகனுக்கு (அஃகுதை—அஃதை) அஃதை எனப் பெயரிட்டிருக்கலாம். தம் மக்களுள் சிறியவள், இளையவள் என்னும் பொருளிலும் பழந்தமிழர் மகளிர்க்கு அஃதை என்று பெயரிடும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கலாம். தமக்கையைக் குறிக்கும் அக்கை என்னும் முறைப் பெயரைப்போல் இச் சொல் மருவிய காலத்தில் இயற்பெயராகுந் தன்மையை இழந்தது.

2. அக்குரன்:

அக்குரன் இடையெழு வள்ளல்களுள் ஒருவன். அக்குரூரன் என்னும் இடைக்குலத் தலைவன் கண்ணனின் உறவினனாகப் பாகவதத்தில் குறிப்பிடப் படுகிறான். துளு நாட்டில் 'அங்காரெ' என்னுச் சொல் ஆண்களின் இயற்பெயராக வழங்கி வருகிறது.

கன்னடம்: அக்கு—பணியச்செய், அடக்கியாள்
அக்காடு—ஒரு முடிவுக்குக் கொண்டுவா

தெலுங்கு: அக்குட—துணிவும் ஆற்றலும் வலிமையும் மிக்க [மறவன்
எக்குடு—உயர்வு, பெருமை.

மேற்கண்ட கன்னடம், தெலுங்கு, துளு மொழிச் சொல்லாட்சிகளால் அக்குரன் என்னுஞ் சொல் (அக்கு+உரன்) அடக்கியாளும் வலிமை வாய்ந்த பெருந்தலைவனைக் குறித்திருத்தல் வேண்டும் என்று தெரிகிறது. ஆற்றல் சான்ற மறவனைக் கன்னடியரும் 'அக்குட' என அழைப்பர். அக்குரன் என்பது கன்னடத்தில் 'அக்குட' எனத் திரிவது இயல்பு. தாழ்த்தப்பட்ட மக்களில் பலர் இன்றும் 'அக்குமாரன்' என்னும் பெயர் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர்.

அக்குரன் என்னும் பெயர் பதிற்றுப்பத்திலும் (14-7) பிங்கலந்தையிலும் குறிப்பிடப்படுகிறது. அக்கு+உரன் அடக்கியாளும் உரன் (திறன்) உடையவன் எனப் பொருள்படும். இச் சொல் அரசு அதிகாரிகளுக்கு அல்லது படைத்துறை அதிகாரிகளுக்கு இடப்பட்ட பதவிப் பெயராக இருந்து, அப்பதவியிலிருந்தவரின் குடிவழியினர்க்கு வரலாற்றுக் கெட்டாத பழங்காலம் முதல் இயற்பெயராயிருத்தல் வேண்டும். அக்குரனார், அக்குரத்தான் என்பவை இதனடியாகத் தோன்றிய இயற்பெயர்கள். (குறிப்பு: 'பழந்தமிழில் மக்கட் பெயர்' என்னும் இக்கட்டுரை தொடர்ந்து வெளிவரும்.)

———

# புலம்பச் செய்த புயலும் வெள்ளமும்

## வெள்ளச் சேத விளரிப் பதிகம்

[ஞா. தேவநேயப் பாவாணர்]

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

(எச்சம் - 3 பாட்டு)

நன்செயும் புன்செ யாகி நாற்புற வரம்ப ழிந்து
முன்செயல் யாவுங் கெட்டு முதிர்ந்தநெற் பயிரு மற்று
வன்செயல் வெள்ளக் காலாய் வதிந்தது வடிந்த பின்னும்
என்செய வுணவிற் கென்றே யிரங்கினர் உழவ ரெல்லாம். 9

சடசட வென்று கொட்டிச் சாடும்வன் புயலாற் செத்த
படபட வென்ற டித்துப் பண்ணைஇற் கோழி யெல்லாம்

கடகட வென்று மாய்ந்த கால்நடை கணக் கிலாத
மடமட வென்று சாய்ந்த மரங்களே சாலேசோலே. 10

நீர்மிகின் சிறையு மில்லே நீளியின் வலியு மில்லே
கார்மிகின் உறையு ளில்லே கனல்மிகின் அணேப்பு மில்லே
பார்மிகும் பரிசொன் றில்லே பரவெளி மனேயெ மூப்பிக்
கூர்மதிக் குடும்பத் திட்டங் கொண்டினி தொழுகு வோமே. 11

நீளி = காற்று.

## அறந்தானே இறைவா?

[நாரண துரைக்கண்ணன்]

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

இயற்கையின் ஆற்றல் என்னே!
எழிலிதான் புயலாய் மாறி
அயல்சொந்தம் என்றே இன்றி
அனேத்தையும் அழித்தல் கண்டோம்
'உயக்கொள்வோம்' என்றே மக்கள்
இறுமாப்பாய்ப் பேசும் பேச்சு
மயல்கொண்ட தொன்று என்றே
மெய்யாக அறிந்தோம் இன்றே. 5

மக்கள்தாம் கொடுமை செய்தால்
மழைதெய்வம் சீற லாமோ?
எக்களித்து எழிலி தானும்
இனிதாகப் பெய்யா விட்டால்
முக்குளித்து மாய்ந்து போவார்
மூண்டெழும் வெள்ளந் தன்னல்
தக்கதோ! தண்துளியே! நீதான்
தீயாக எரிந்து கோறல்? 6

அறந்தானும் வெகுண்டு நின்று
அழிக்கவே நினேத்த தேயோ?
மறத்தினல் புயலேத் தந்து
மக்களே மடித்த தேயோ?
குறித்ததோர் கால மின்றிக்
கொடுமையைச் செய்ய லாமோ?
அறந்தானே? இறைவா? மக்கள்
இழிக்கினும ஒறுத்தல் நன்றோ? 7

---

## ஊனமுற்றோர்க்கு ஒளிமிக்க வாழ்வளிக்கும் தொற்கை ஈன்ற புகழ்முத்து தி. சு. மணியம்

நெல்லை மாநகரில் குளப்பிறை தெருவில் 'தி. சு. மணியம் செயற்கை உறுப்புக்கள் செய்தொழிலகம்' (orthotic and prosthetic centre) என்ற பெயரில் ஒரு நிறுவனம் கடந்த 10 ஆண்டுகளாக இயங்கி வருவதைத் தமிழ் அன்பர்கள் அறிவர்.



இளம்பிள்ளை வாத நோயினல் உடலுறுப்புக்கள் செயல்படாத நிலையில். உள்ள குழந்தைகட்கும், கைகால் இழந்தவர்கள், மற்றும் உடலியலில் குறைபாடுடைய நோயாளிகள் ஆகியோர்க்கும், உடலியல் மருத்துவர்களின் நற்சான்று களுடன் அக்குறைபாடுகளை நீக்குதற்கு வழிகாட்டியாய் அமைந்து பணியாற்றிவருகிறது "தி. சு. மணியம் அண்டு கோ" எனப்படும் இந் நிலையம். முடநீக்கு மருத்துவர்கட்கு ((orthopaedic surgeons) உறு துணை புரியும் வகையில் இத் தொழிலினைச் செய்து பேரும் புகழும் பெற்றுவருபவர் திரு. தி. சு. மணியம் அவர்களாவர்.

இவர் தொற்கையில் சைவ வேளாள குலத்தில் பிறந்தவர் என்பதும் நம் கழக ஆட்சியாளரின் நெருங்கிய உறவினர் என்பதும் குறிப்பிடத்தக்க செய்திகளாகும். ஏறக்குறைய 12 ஆண்டுகட்கு முன்னர் இவர் நம் சை. சி. நூற்பதிப்புக் கழகத்தில் அச்சகப் பிரிவில் பணியாற்றி வந்தார். பின்னர் நெல்லையில் தொடுகோல், தோற்பைகள், கையுறைகள் ஆகியவற்றைச் செய்யும் தொழிலினை மேற் கொண்டார். அத் தொழிலில் அவருக்கு நேர்ந்த பொருளிழப்பின் விளைவாக அதனை விடுத்து, இந்த ஊனமுற்றோர்க்குச் செயற்கை உறுப்புக்கள் தயாரிக்கும் பணியில் இறங்கினர். இவர்தம் பணிச் சிறப்பினைக் கண்ட மருத்துவர்கள் இவரைப் பாராட்டியதோடு மேலும் அப் பணிக்கு வேண்டிய ஆக்கமும் ஊக்கமும் அளித்ததன் பலனுக இன்று 'தி. சு. மணியம் கம்பெனி' இத் துறையில் மிகப்பெரிய தொரு நிறுவனமாக வளர்ந்துள்ளது. இந் நிறுவனத்துக்கு அரசு மருத்துவர்கள் நற்சான்றிதழ்கள் பல வழங்கியுள்ளனர். மருத்துவர்கள் இவரைப் 'பேட்டி' கண்டுள்ளனர். அதற்கு இவர் தந்த விடைகள் சிறப்புமிக்கவையாகும். மேலும் இவர் 'நோயும் நோய் நீக்கத்திற்குரிய துணைக் கருவிகளும்' என்னும் தலைப்பில் படங்களோடு கூடிய விளக்கம் ஒன்றினையும் உருவாக்கி வருகிறர். அது விரைவில் நம் கழகவழி நூல் வடிவில் வெளிவரும் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். திரு மணியம் அவர்கள் மேற்கொண்டிருக்கும் இப் பயனுள்ள தொழிலுக்குத் தமிழ் நாட்டார் ஆக்கமும் ஊக்கமும் அளிப்பார்களாக.

———

## 35ஆவது தமிழிசை விழா

தமிழிசைச் சங்கத்தின் 35ஆவது விழா அரசர் அண்ணுமலை மன்றத்தில் 23—12—1977 முதல் 3—1—1978 முடியத் தொடர்ந்து பன்னிரு நாட்கள் நடைபெற்றது. தமிழ்நாட்டு முதலமைச்சர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் 23—12—1977 அன்று விழாவினைத் தொடங்கிவைத்தார். நாதசுர இசைவல்லுன ரான திருவீழிமிழலை திரு. சா. நடராச சுந்தரம்பிள்ளை அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினுர். அவருக்கு 'இசைப் பேரறிஞர்' என்ற விருதும் பொற்பதக்கமும் சான்றிதழும் அளித்துத் தமிழிசைச் சங்கம் அவரைப் பாராட்டியது.

24—12—1977 முதல் 27—12—1977 வரையிலான நான்கு நாட் களிலும் முற்பகல் நேரங்களில் பண்ணுராய்ச்சியின் இருபத்தெட்டாம் ஆண்டுக் கூட்டம் அரசர் அண்ணுமலை மன்றத்தில் நடைபெற்றது. முதல்நாள் (24—12—1977 சனி) காலை 10-35 மணியளவில் கலை மகள் ஆசிரியர் கி. வா ஜகந்நாதன் அவர்கள் தொடங்கிவைத்தார்.

நாள்தோறும் இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் வழக்கம்போல் சிறப்பாக நடைபெற்றன. அரிய கட்டுரைகள், பாடல்கள், கலைஞர் களின் படங்கள் முதலியவற்றைத் தாங்கியுள்ள மலர் ஒன்று வெளி யிடப்பட்டது.

### பெயர் மாற்றம்

ஸ்ரீவில்லிபுத்தூர், ஸ்ரீரங்கம், ஸ்ரீபெரும்புதூர், ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊர்ப் பெயர்களின் தலைப்பில் உள்ள ஸ்ரீ என்பதை அகற்றி விட்டு அவ்விடத்தில் திருவை அமைக்க நடுவணரசிடம் இசைவு கேட் டிருப்பதாக நிதியமைச்சர் மாண்புமிகு கி. மனேகரன் அவர்கள் 29—12—1977 அன்று சட்டப் பேரவையில் தெரிவித்துள்ளார். மேலும் தி.மு.க. அரசே இத்துறையில் நடுவணரசுக்குக் கோரிக்கை விட்டதாகவும், அப்பொழுதைய நடுவணரசு பெயர் மாற்றம் கோரு வதில் மாநில வெறி இருப்பதாகக் காரணம் காட்டி மறுப்புத் தெரி வித்துவிட்டதாகவும் கூறியுள்ளார்.

தென்னிந்திய இருப்புப் பாதையிலுள்ள நிலையங்கள் சிலவற்றின் பெயர்களில் தவறுகள் பல இருக்கின்றன. அவற்றை மாற்றுவதற்குக் கழக ஆட்சியாளர் எழுதி வைத்திருக்கும் குறிப்புக்களைத் தமிழக அரசுவழி நடுவணரசுக்கு அனுப்பி வைப்பதற்கு வேண்டுவன விரைவிலே செய்யப்படும்.

# டாக்டர் ஞா. திருவேங்கடம் பிரிவாற்ருமை

டாக்டர் திருவேங்கடம் அவர்கள் திருநெல்வேலி மாவட்டம் பட்டர்புரம் என்னும் ஊரில் நிலக்கிழார் ஞானதேசிகம் பிள்ளை அவர்களின் திருமகனுராகப் பிறந்தவர். நெல்லை இந்துக் கல்லூரியில் படித்துப் பி.ஏ. பட்டம் பெற்றுப் பின்பு சென்னை ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியில் எம்.பி., பி.எஸ். பட்டம் பெற்றனர்.



இந்தியன் ஓவர்சீஸ் பாங்கு பொது மேலாளராக இருந்து ஓய்வு பெற்ற உயர்திரு. எஸ். ஆர். வி. அரசு அவர்கள் திருமகளாரை மணந்து மூன்று பெண்மக்களைப் பெற்றுப் புகழுடன் வாழ்ந்தனர்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1921 இல் சென்னையில் கிளை நிலையம் அமைத்த சென்னை மண்ணடி பவழக்காரத் தெரு 2 ஆம் எண் கட்டடத்தின் கீழ்ப் பகுதியில் 13—3—1953இல், மருத்துவமனை அமைத்துச் சுற்றிலுமுள்ள பல் குல மக்களுக்கும்,

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்ற பொய்யா மொழியினைக் கடைப் பிடியாகக் கொண்டு இன்முகங்காட்டி அன்பாகப் பேசி, மருத்துவம் செய்து பெரும்புகழ் பெற்று வந்தனர். பல்துறை வாணிபத்திற் சிறந்து விளங்கும் இராலீஸ் இந்தியா லிமிடெட் நிறுவனத்தின் 'அலுவலக மருத்துவராக'ப் பணியாற்றி அங்குள்ள அனைத்து அலுவலர்களின் நன்மதிப்பையும் பெற்றிருந்நார்.

அவர் முன்பு இருமுறை நெஞ்சுவலி ஏற்பட்டு மருத்துவமனையில் தங்கி நலம் பெற்றனர். 16-12-77 வரை தம் மருத்துவமனைக்கு வந்து வழக்கப்படி பணி புரிந்தனர். 17-12-77 சனிக்கிழமையன்று நெஞ்சுநோய் பற்றித் தகுந்த மருத்துவரிடம் ஆய்வு செய்து கொண்டனர். அன்று தமது வீட்டிலேயே தங்கி எல்லாரோடும் மகிழ்வாய்ப் பேசிக்கொண் டிருந்தனர். ஞாயிறு காலை 5 மணிக்கு மேல் அவர்கள் உடல்நிலையில் மாறுதல் ஏற்படவே மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கே முறைப்படி மருத்துவம் செய்தும் பயன்படாமல் அங்கே உயிர் துறந்த செய்தி பரவி, அவர்தம் சுற்றத்தாரும் நண்பரும் அவரிடம் மருத்துவஞ் செய்துகொண்டோரும் ஆற்ருெணுத் துன்பம் அடைந்தனர்.

இவர்தம் பிரிவு கழக ஆட்சியாளர்க்கும், அவர்தம் குடும்பத்தார்க்கும் பெருந்துயர் விளைப்பதாகும்.

மறைந்த டாக்டர் அவர்களின் ஆருயிர் இறையடியில் இன்புற்றமர்கவென வேண்டுவதைத் தவிர சிற்றுயிர்களாகிய நம்மால் செயற்பாலதொன்றுமில்லையே.

———

# 1977ஆம் ஆண்டு: சில சிறப்பு நிகழ்ச்சிகள்

கடந்த 1977ஆம் ஆண்டில், வரலாற்றில் இடம்பெறத்தக்க ஏராளமான நிகழ்ச்சிகள் இவ்விந்தியத் துணைக்கண்டத்தில் இடம் பெற்றன. இன்றியமையாமை நோக்கிச் சில நிகழ்ச்சிகள் மட்டும் ஈண்டுத் தரப்படுகின்றன.

சனவரி 18: தலைமை அமைச்சர் இந்திராகாந்தி அவர்களின் அறிவுரைப்படி குடியரசுத் தலைவரால் இந்திய நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது.

சன. 20: அரசாங்கத்தால் நெருக்கடி காலநிலைச் சட்டத்தைத் தளர்த்திப் பொதுத் தேர்தலுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

பிப்பிரவரி 2: நடாளுமன்றப் பொதுத் தேர்தலை மார்ச்சுத் திங்களில் நடத்துவதென நாட்கள் அறிவிக்கப்பட்டன.

பிப். 11: குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது காலமானர். துணைக் குடியரசுத் தலைவர் திரு. பி. டி, சாட்டி தற்காலிகத் தலைவரானர்.

மார்ச்சு 16: நாடாளு மன்றத் தேர்தல் துவக்கம். 15 மாநிலங்களில் 300 நாடாளுமன்றத் தொகுதிகட்குத் தேர்தல் நடைபெற்றது.

மார். 18, 19, 20: முறையே நாடாளுமன்றத் தேர்தல்கள் 2, 3, 4வது கட்டங்கள் நடைபெற்றன.

மார். 20: 1975 சூன் 25இல் உள்நாட்டு நெருக்கடி நிலைச்சட்டப்படி செய்யப்பட்ட செய்தி இதழ்த் தணிக்கைகள் நீக்கப்பட்டன.

மார். 22: நாடாளுமன்றத் தேர்தலில் சனதா கட்சியும் அதன் தோழமைக் கட்சிகளும் பெருமளவில் வெற்றி பெற்றன இந்திராகாந்தி அம்மையார் பதவியினின்று விலகினர்.

மார். 24: திரு. மொரார்சி தேசாய் சனதாக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

மார். 25: 19 பேர்களடங்கிய இந்திய நடுவண் அமைச்சரவை நிறுவப்பட்டது.

மே 19: நெருக்கடிகால நிலையில் நடைபெற்ற வரம்பு மீறிய செயல்களை உசாவல் செய்யத் திரு. ஜெ. சி. ஷா அவர்கள் நடுவராக அமர்த்தப்படுதல்.

சூன் 15: தமிழ்நாட்டில் அ. இ. அ. தி. மு. க. சட்டமன்றத் தேர்தலில் பெரு வெற்றி பெற்றது.

சூலை 7: தேசிய விருதுகள் வழங்குவதை நிறுத்திவிடுவ தென்று அரசு முடிவு செய்தது.

சூலை 21: திரு. நீலம் சஞ்சீவி ரெட்டி இந்தியக் குடியரசுத் தலைவராய்ப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அக்டோபர் 3: திருமதி இந்திராகாந்தி அவர்கள் மைய அரசுப் புலனுய்வுத் துறையினரால் கைது செய்யப்பட்டார்.

அக். 4: தில்லி உயர்நீதிமன்றம் திருமதி இந்திராகாந்தியை விடுதலை செய்தது.

நவம்பர் 19: ஆந்திர மாநிலக் கரையோரப் பகுதிகள் பெரும் புயலினுல் தாக்கப்படுதல். தமிழ்நாட்டில் புயல், வெள்ளம் ஆகிய வற்ருல் பெருங்கேடுகள்.

திசம்பர் 18: திருமதி இந்திராகாந்தி அம்மையார் காங்கிரசு செயற் குழுவிலிருந்து விலகல்.

திசம்பர் 23: 'மிசா' சட்டத்தினை நீக்க, சட்ட நகல் கொணரப் பட்டது.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்க முதல் மாநாடு

உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கத்தின் முதல் மாநாடு 1977 திசம்பர்த் திங்கள் 16, 17, 18 ஆகிய நாட்களில் முதலிரு நாட்கள் மயிலை கற்பகாம்பாள் திருமண மண்டபத்திலும், மூன்ரும்நாள் சென்னையை அடுத்த தங்கங் கடற்கரையிலும் நடைபெற்றது. முதல் நாள் முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் தலைமையிலும் இரண்டாம்நாள் மொழி நூலறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையிலும் மாநாடுகள் நடைபெற்றன. தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் வரவேற்புக் குழுத் தலைவராகவும் முன்னுள் நடுவர் திரு. என். கிருட்டிணசாமி ரெட்டியாரவர்கள் வரவேற்புக் குழுச் செயலாளராகவும் அமைந்து மாநாட்டினைச் சிறப்புற நடத்தினர். இம் மாநாட்டில் அறிஞர் பலர் கருத்துரை யாற்றினர். இலங்கை, மலேசியா, மொரீசியசு, பிஜி, இந்தோனேஷியா, பர்மா, இங்கிலாந்து, தென்னுப்பிரிக்கா ஆகிய நாடுகளிலிருந்தும் பேராளர்கள் வந்திருந்தனர். இம் மாநாட்டினை யொட்டிக் கண்காட்சி, இசையரங்கு ஆகியனவும் நடைபெற்றன.

## இந்தியப் பொருளியல் கழக மணிவிழா

இந்தியப் பொருளியல் கழக மணிவிழா 28—12—1977 அன்று சென்னைப் பல்கலைக்கழக நூற்ருண்டு மண்டபத்தில் பம்பாய் பல்கலைக் கழகப் பொருளியல் பேராசிரியர் டாக்டர் பி. ஆர். பிரும் மானந்தா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. இந்திய ரிசர்வ் வங்கி ஆளுநர் டாக்டர் ஐ. ஜி. படேல் அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார். 29, 30—12—1977 ஆகிய நாட்களில் பொருளியற் கருத் தரங்கம் நடைபெற்றது. கருத்தரங்கில் தமிழ்நாட்டு நிதி அமைச்சர் மாண்புமிகு கி. மனேகரன் அவர்களும் கல்வியமைச்சர் மாண்பு மிகு ச. அரங்கநாயகம் அவர்களும் கலந்துகொண்டனர். டாக்டர் வேதகிரி சண்முக சுந்தரம் அவர்கள் எழுதிய 'திருவள்ளுவரின் பொருளியல்' என்னும் நூல் நிதியமைச்சர் அவர்களால் வெளியிடப் பட்டது.

## நெல்லைநகர் திருமுருகன் திருச்சபை—அன்பர்களுக்கொரு வேண்டுகோள்

அண்மையில் திருச்செந்தூரில் 'சூரசம்ஹாரம்' நடக்கும் அதே நாளில் வங்கக்கடலில் ஒரு கொடும் புயல் உருவாகி அப் புயல் தூத்துக்குடிக்கும் திருச்செந்தூருக்கும் இடையில் கரையைக் கடக்கும் என்று அரசு தரப்பில் செய்தித்தாள்கள் மூலமாகவும், வானொலி மூலமாகவும் எச்சரிக்கை செய்யப்பட்டன. அதன்பொருட்டுத் திருச்செந்தூரில் மாலையில் நடைபெற வேண்டிய 'சூரசம்ஹார'த்தைக் காலையில் 11 மணிக்குள் நடத்தி முடித்திட ஏற்பாடுகள் நடந்தன. அதற்கு மாறுகக் கோயில் போற்றியும் திருமுருகன் பக்தர்களும் "அப்படி ஒருகாலும் காலையில் நடக்கக் கூடாது. வழக்கம்போல் மாலையில்தான் நடக்கவேண்டும். அந்த முருகப்பெருமான் இருக்கிருரா என்பதை இந்தக் கலியுகம் அறியட்டும்" என்று உறுதி மேற்கொண்டார்கள். அதன் பலனுக அந்தக் கொடும் புயல் முருகப்பெருமானிடம் அடிபணிந்தது. ஆனுல், இலங்கையின் கதிர்காமம் மலையின் மீது தாக்கி, அதே வேகத்தில் ஆந்திர மாநிலத்தில் கரையேறி ஆயிரக்கணக்கான மனித உயிர்களையும், கால்நடைகளையும் பல கோடிக்கணக்கான சொத்துக்களையும் அழித்துக் கேட்டினை விளைவித்த செய்தி நாம் அனைவரும் அறிவோம்.

இதனை முன்னிட்டு அருள்மிகு முருகப் பெருமானுக்கு நெல்லை மாவட்ட மக்கள் இந்த ஆண்டு முதல் மார்கழி மாதம் ஒரு மண்டலம் நோன்பு மேற்கொண்டு காவியுடையணிந்து மாலை அணிந்து நாற்பத்தொரு நாட்கள் காலை மாலை நீராடி தினமும் திருச்சபையில் கலந்து வழிபாடாற்றித் தைப்பொங்கலுக்கு முன்தினம் காலையில் திருச்சபையில் வைத்து முருகன் அடியார்கள் அவரவர்கள் வேண்டுதல்கள்படி முருகனுக்குரிய திருமுழுக்குப் பொருட்களைத் தலையில் சுமந்து கொண்டு நெல்லையில் இருந்து கால்நடையாகத் திருச்செந்தூர் சென்று அதிகாலையில் (பொங்கலன்று) தமிழ்க்கடவுளாம் முருகனுக்குத் திருமுழுக்கு, ஒப்பனை செய்து முருகப்பெருமானின் திருவடிகளை வணங்கி விட்டு ஊர் திரும்புவதென்றும் இந்தத் திருச்சபைக்குத் திருச்செந்தூர்த் திருக்கோயில் பொறுப்பாளர்களும் பொதுமக்களும் ஒத்துழைப்புத்தர இந்தச் சபை முருகப்பெருமானை வேண்டிக்கொள்கிறது என்றும் ஓர் அறிக்கை மூலம் இத் திருச்சபையின் தலைவர் திரு. லெ. அருணுசலம் அவர்கள் கேட்டுக்கொள்கிருர்கள்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-௪, உ௦௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு கழக ஆட்சியாளர் அவர்கள் திச. 77 | 100 00 |
| ,, கழக மேலாளர் ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் | 5 00 |

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# அமெரிக்கத் தமிழ் இலக்கிய மன்றம்

## சிக்காகோ

# கட்டுரைப் போட்டி

டாக்டர் கு. பரமசிவன்,
பொறுப்பாளர்.

நோக்கம் :-

தனித்தமிழ் பயிலும் (புலவர், வித்துவான்) மாணவர்களின் வாழ்க்கை வாய்ப்புக்கள் உயர்தல், அவர்கள் கற்ற கல்வி தமிழகத்துக்குப் பயன்படுதல்.

கட்டுரைப்பொருள் :-

தனித்தமிழ் பயிலும் (புலவர், வித்துவான்) மாணவர்கள் தமிழ்த் துறையில் மட்டுமன்றி ஏனைத் துறைகளிலும் பணிசெய்து சிறப்படைய அவர்களுடைய பாடத் திட்டங்களிலும் அரசினர் சட்ட திட்டங்களிலும் மாற்றங்கள் தேவையா ?

பரிசுகள் :-

| | | |
|---|---|---|
| முதல் பரிசு (ஒன்று) | ரூ. | 1000–00 |
| இரண்டாம் பரிசு (ஒன்று) | ரூ. | 500–00 |
| மூன்றும் பரிசு (மூன்று, ஒவ்வொன்றும்) | ரூ. | 100–00 |

போட்டி விதிகள் :-

1. புலவர், வித்துவான் வகுப்புக்களிற் பயிலும் தனித் தமிழ் மாணவர்கள் மட்டுமே போட்டியிற் கலந்து கொள்ளலாம்.

2. அவ்வாறு பயிலும் மாணவர் என்பதற்குச் சான்று கூறும் முதல்வர் / பேராசிரியர் கடிதம் ஒன்றினைக் கட்டுரையோடு அனுப்புதல் வேண்டும்.

3. தாளின் ஒரு புறம் மட்டுமே எழுதுதல் வேண்டும்.

4. கட்டுரை 2000 சொற்களுக்கு மேற்படல் ஆகாது.

5. கட்டுரையின் எப்பக்கத்திலும் எழுதுவோரின் பெயரோ முகவரியோ இருத்தல் கூடாது. எழுதுவோரின் பெயரும் முகவரியும் தனித் தாளில் எழுதப்பெற்றுக் கட்டுரையோடு இணைக்கப்பெறுதல் வேண்டும்.

6. கட்டுரைகள் 31-1-1978க்குள் அனுப்பப்பெறுதல் வேண்டும். அதற்குப் பிற்பட்ட அஞ்சல் முத்திரை பெற்ற கட்டுரைகள் ஏற்கப்படமாட்டா.

7. மதுரைத் தமிழறிஞர் மூவரோடு பொறுப்பாளர் அடங்கிய குழு பரிசுக்குரிய கட்டுரைகளைத் தெரிவு செய்யும்.

8. பரிசு பெற்றோர் தனித் தனியே கடிதவழி அறிவிக்கப்படுவர். பரிசு தொடர்பாகக் கடிதப்போக்கு வரத்துக் கொள்ளத் தேவையில்லை.

9. பரிசுகள் மதுரையில் பெபுருவரியில் ஒரு விழா அமைத்து வழங்கப்பெறும்.

10. பரிசு பெற்ற கட்டுரைகளைத் தான் விரும்பும் வகையில் பயன்படுத்தும் உரிமை அமெரிக்கத் தமிழிலக்கிய மன்றத்துக்கு உண்டு.

11. பரிசு பெறாத கட்டுரைகளைத் திருப்பியனுப்புதல் இயலாது.

கட்டுரை அனுப்பவேண்டிய முகவரி:-

டாக்டர் கு. பரமசிவன்
தமிழ்த்துறை
அமெரிக்கன் கல்லூரி
மதுரை - 625 002

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| திருக்குறளில் அறிவு—பேராசிரியர் பா. சு. மணியம் | 8 | 00 |
| தொல்காப்பியத் தெளிவு—டாக்டர் சோ. ந. கந்தசாமி | 5 | 00 |
| தொல்காப்பியம் சொல்லதிகாரம்—மகாகவி அ. கு. ஆதித்தர் | 7 | 50 |
| அதிக இரத்த அமுத்தம்—க. கந்தசாமி முதலியார் | 2 | 50 |
| பாரதிதாசன் குயில் பாடல்கள்—பாரதிதாசன் | 4 | 90 |
| மொழியியல் சிந்தனைகள்—மு. வை. அரவிந்தன் | 6 | 50 |
| தமிழ் இலக்கியக் கதைகள்—நா. பார்த்தசாரதி | 6 | 25 |
| தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்<br>—டாக்டர் எ. என் பெருமாள் | 10 | 00 |
| அரை மனிதன்—பேராசிரியர் ரா. சீனிவாசன் | 4 | 00 |
| சிற்றன்னை—புதுமைப்பித்தன் | 2 | 50 |
| அறுபெரும் விஞ்ஞானிகள்—பி. எல். இராஜேந்திரன் | 3 | 00 |
| திருக்கோலம்—கி. வா. ஜகந்நாதன் | 7 | 50 |
| காட்டாறு—கி. சா. ராஜி | 9 | 10 |
| தவம்—அனுத்மா | 10 | 00 |
| மனக்கோலம்—''மஹி'' | 5 | 00 |
| மொழியியல் வாழ்வும் வரலாறும்<br>—டாக்டர் ச. அகத்தியலிங்கம், க. புஷ்பவல்லி | 16 | 00 |
| ஒருதுறைக் கோவை—அமிர்தகவிராயர்<br>உரையாசிரியர் : காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு | 9 | 80 |
| மங்கல மனைமாட்சி—டாக்டர் ந. சஞ்சீவி | 3 | 75 |
| பிளினி—வி. எஸ். வி. இராகவன் | 20 | 00 |
| சந்தனத் தேவன்—எஸ். எஸ். தென்னரசு | 4 | 50 |
| மண்ணின் மணம்—வாசவன் | 25 | 00 |
| நாரத ராமாயணம்—புதுமைப்பித்தன் | 1 | 75 |
| மலரும் சருகும்—டி. செல்வராஜ் | 6 | 00 |
| அலைகள் பேசுகின்றன—ஜே. எம். சாலி | 2 | 00 |
| மெத்த வளருது விஞ்ஞானம்—நித்யானந்தம் | 4 | 50 |
| முத்துக் கவிதைகள்—இளங்கவி எஸ். முத்துராமி | 2 | 00 |
| வீரமா முனிவர் கலம்பகம்—துரை. சுந்தரமூர்த்தி | 2 | 50 |
| A Study of the Sociological novels in Tamil<br>—R. Dhandayudham | 15 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.